

# அர்ச். அந்தோணியாரின் வாழ்க்கை வரலாறு

# Contents

# 1. லிஸ்பனின் லீலி மலர்கின்றது

"நீதிமானின் தந்தை மிகுதியாக அகமகிழ்கிறார்" (பழமொழி 23:23)

**அரசியல் கொந்தளிப்பு**

தொட்டிலை ஆட்டும் கைதான் உலகை ஆளும். தந்தையின் வழியாகவே குழந்தை சர்வேசுரனை அறிகின்றது. பெற்றோரின் நடத்தை பிள்ளைகளின் பாடப்புத்தகம். அந்தோணியாரின் தாய் "ஓ! மகிமை பொருந்திய ஆண்டவளே" என்ற பாட்டைப் பாடி அவரைத் தாலாட்டுவாள். இதனால் அவருக்குத் தேவதாயின் மீதுள்ள பக்தி வளர்ந்து மரணம் மட்டும் இப்பாட்டை அடிக்கடி அவர் பாடி வருவது வழக்கம்.

போர்த்துக்கல் நாட்டின் தலைநகரம் லிஸ்பன். வரலாற்றில் லிஸ்பன் மாபெரும் சிறப்புப் பெற்றுள்ளது. இந்தியாவுக்கு வர கடல்வழி கண்டுபிடித்த வஸ்கொடகாமா இங்கிருந்து தான் தன் பயணத்தை தொடங்கினார். தூய சவேரியாரும் லிஸ்பனில் இருந்துதான் இந்தியா புறப்பட்டார். இப்பட்டணதின் பேராலயத்தின் அருகிலுள்ள மாளிகை ஒன்றில் 1195ம் ஆண்டு தேவதாயின் விண்ணேற்பு பெருவிழாவான ஆகஸ்டு 15 அன்று அந்தோணீயார் பிறந்தார். அந்தோணீயார் பிறந்த இடத்தில் அவர் பெயரால் கட்டப்பட்ட ஓர் ஆலயம் உள்ளது. இந்த வீட்டில் எம் முன்னோர்கள் கூறிய சாட்சிகளின்படி இவ்வுலகில் இருந்து மகிமைமிகும் பரலோக மாளிகைக்கு எடுத்துச் செல்லப்பட்ட அந்தோணீயார் பிறந்தார் என்று அந்த ஆலயத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

14ம் நூற்றாண்டுக் குறிப்புகள்: அவரது தந்தை மார்த்தீன் என்றும் தாய் மேரி என்றும் தாயாரின் சொந்த ஊர் தெபேரா என்றும் காண்கிறது. சிலுவை யுத்தத்தில் சிறப்புற்று எருசலேமின் முதல் அரசனான கோத்பிரே பாயிலியோன் என்பவரின் மரபினர் மார்த்தீன் என்று பிற்கால எழுத்தாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். மூர் என்ற சாதியாரின் பிடியிலிருந்து போர்த்துக்கலை விடுதலை செய்ய மார்த்தீன் அரசருடன் உழைத்தார் என்பது உண்மை . இவர்களுக்குச் சொந்தமான ஒரு மாளிகை பேராலயத்தின் மேற்குப் பக்கத்தில் இருந்தது. இதற்கு சான்று அந்தோணியார் பிறந்த நாட்களில் நாட்டு அரசியலில் அமைதியில்லை.

1139இல் அல்போன்ஸே என்றிக் என்ற மன்னன் நாட்டை - பாப்பிறையின் பாதுகாப்பின் கீழ் வைத்தான். 1155ல் லிஸ்பன் தலைநகரானது. பாப்பிறை 3வது இன்னொசன்று 1179ல் அவன் ஆட்சியை அங்கீகரித்தான். அதன் பின்னர் அரசன் பல துறவியர் மடங்களைக் கட்டி பக்தியை வளரச் செய்தான். அவனுக்குப் பின் வந்த முதலாம் சாங்கோ அகங்காரம் கொண்டவன். ஆகையால் திருச்சபைக்கும் அவனுக்கும் சிலுவைப்போர் மூண்டது. தலைநகரை கோயிம்பிரா நகருக்கு மாற்றினான். பாப்பிறை 3வது

இன்னொசன்று 1208 அவனை சபித்து ஆணை பிறப்பித்தார். இவ்விதம் அரசியல் கொந்தளிப்பான சூழ்நிலையில் நாடு இருக்கும் போது பிறந்ததினாலேயே "கார்மேகங்களின் இடையில் தோன்றிய விடிவெள்ளி" என்று புகழப்படுகின்றார்.

**ஞானநீராட்டுதல்**

அவர் தேவ அன்னைக்கு அர்ப்பணிக்கப்பட்ட தூய பத்திரியார்கால், பேராலயத்தில் சிறுவனுக்கு திருமுழுக்கு வழங்கப்பட்டு, பெர்தினாந்து என்ற பெயர் சூட்டப்பட்டது. சிறுவன் ஞானநீராட்டுப் பெற்ற தொட்டி இன்றும் இருக்கிறது.

புனிதருக்கு திருமுழுக்குக் கொடுக்கப்பட்ட இடத்தில் "சென்ம பாவத்தின் எல்லாக் கறைகளையும் பெர்தினாந்துவிடமிருந்து நீக்கப்பட்ட இடம் இதுவே. அவர் ஒளியால் அகிலம் அகமகிழ்வு கொள்கின்றது. அவரது உடலால் பதுவையும், ஆன்மாவால் பரமும் மகிழ்கின்றது" என்று குறிக்கப்பட்டுள்ளது.

திருயாத்திரிகர்களுக்கு இது ஒரு முக்கியமான இடம். ஞானஸ்தானத்தின் வழியாக சர்வேசுரனின் மகனானார். அவர் என்றும் தூயவராகவே வாழ்ந்தார். ஞானஸ்தானத்தைப் பற்றி அந்தோணியார் பிற்காலத்தில் பின்வருமாறு கூறுகின்றார்:

"ஒருவனுக்கு ஞானஸ்தானத்தால் இரு பொருள்கள் அறிவுறுத்தப்படுகிறது. அவை:

வெண்ணிற ஆடை, எரியும் திரி.

இவ்வருட்சாதனம் அளித்த தூய்மையை வெண்ணிற ஆடையும், அவன் வாழவேண்டிய தூய வாழ்வை எரியும் திரியும் காட்டுகின்றது. பாவத்தால் தன் வெண் ஆடையை கறைப்படுத்தி அதனால் எரியும் திரியை அணைத்திடும் பொழுது அவன் இவற்றை இழந்து விடுகின்றான்"

**பெற்றோரின் பெருமை**

அந்தோணியாரின் பெற்றோர் உத்தம் கிறிஸ்தவர்கள். அன்புடனும் பண்புடனும் வாழ்ந்தனர். சர்வேசுரனுக்குப் பயந்தவர்கள். பிறர் மனதை ஒரு போதும் புண்படுத்தியதே இல்லை. எனவே குடும்பத்தில் முழு அளவில் அமைதியும், சமாதானமும் இருந்தது. மகிழ்ச்சி அங்கு இளநகை புரிந்தது. "கனியைக் கொண்டே மரத்தை அறியலாம்" இது இறைவாக்கு. சர்வேசுரனுக்கும் மனிதருக்கும் பிரியமாய் நடந்த இவர்களின் கனியாகிய அந்தோணீயார் எப்படி

இருப்பார்? தங்கள் குழந்தை ஞானத்திலும் அறிவிலும் வளர வேண்டுமென விரும்பி செயல்பட்டனர். மோயீசனுக்குப் பிறகு இஸ்ராயேலரை வழி நடத்த சர்வேசுரனால் தெரிந்து கொள்ளப் பட்ட யோசுவா, “நானும் என் வீட்டாரும் ஆண்டவரையே தொழுது வருவோம்” (யோசுவா. 24.׃.25) என்றார். அதைப் போலவே இவ் வீட்டாரும் செய்து வந்தனர். எனவே அந்தோணியார் பக்தி மிக்கவராய் வளர்ந்தார். சிறுவயதிலேயே ஏழைகளுக்கு அன்பு செய்தார். பிறர் துன்பத்தைக் கண்டு மனம் இரங்குவார். ஆலயங்களுக்கும் அடிக்கடி செல்வார். நல்ல பையன், “சிறுவனின் தூதன்” என்று யாவராலும் புகழப்பட்டார்.

“நீதிமானின் தந்தை மிகுதியாக அகமகிழ்கின்றான்: ஞானியைப் பெற்றவன் அவனைப் பற்றி மகிழ்கிறான் உன் தந்தையும், உன் தாயும் மகிழ்வார்களாக் உன்னைப் பெற்றவள் அக்களிப்பாளாக!” (பழமொழி 23.׃.24,25)

**கல்வி**

லிஸ்பன் மாநகரில், ஆயர் சாகர் ஆண்டகை நடத்தி வந்த பேராலயப் பள்ளிக்குப் பெர்தினாந்தைப் பெற்றோர் அனுப்பி வைத்தனர். உலகியல் கல்வியுடன் இலத்தீன் மொழியையும், மறைக்கல்வியையும் கற்றார். அவரிடம் இருந்த அளவற்ற தெய்வபயம், அவரை நற்குணச் சிறுவனாக ஒழுகச் செய்தது. தேவதாய்க்கு அர்ப்பணிக்கப்பட்ட அவ்வாலயத்திற்கு திருப்பயணிகள் திரள் திரளாக வந்து செல்வர். மாதாவின் கருணை, பக்தர்களுக்கு அருள்மாரி பொழிவதை அவர் கண்கூடாகக் கண்டார். அவர்களுடன் அன்னையின் புகழ் பாடுவார். ஏற்கெனவே அவரின் தாயால் ஊட்டப்பட்ட தேவதாய் மீதான பக்தி அவரில் உறுதியடைந்தது.

“நமது அன்னையின் பெயர் ஒரு மாபெரும் கோபுரம். பாவகளுக்கு அவளிடம் அபயம் உண்டு. மீட்பை அளித்து பாவிகளுக்கு வலுவையும், நம்பிக்கையையும் அருளும் அவள் பெயர் எத்துணை இனியது! எம் ஆண்டவளே! கடலின் விண்மீனே! உம்மை வேண்டுகிறோம். இவ்வுலகமென்னும் துன்பப் பெருங்கடலிலிருந்து மீண்டும் முடிவில்லா மகிழ்வின் துறைமுகமான பரத்தை அடைய ஒளி வீசும்”.......... என பிற்காலத்தில் நம் புனிதர் குறிப்பிட்டுள்ளார்.

சர்வேசுரனின் அடியார்களால் உருவாக்கப்பட அவர் பெற்றோர் விரும்பி, பேராலயப் பள்ளிக்கு அனுப்பினர். பிற்காலத்தில் கோடி அற்புதராக அவர் திகழ இதுவே காரணமென அவர் பள்ளி நாட்கள் பற்றி சாட்சி பகர்ந்த, இரண்டாவது சாகர் ஆண்டகை மொழிந்துள்ளார். உலகியல் கல்வியும், உலக பதவிகளும் இலாபங்களுமே போதும் என இன்று பல பெற்றோர்கள் எண்ணுகின்றனர். பிள்ளைகளின் ஞான வாழ்வில் அவர்கள் அக்கறை காட்டுவதில்லை. நல்வழி நடத்துவதில்லை் கண்டித்துத் தண்டிப்பதில்லை.

பிரம்பை கையாளாதவன் பிள்ளையை பகைக்கிறான் அவனை நேசிக்கிறவன் கட்டாயமாய் கற்பிக்கிறான்" (பழமொழி 14424) இதனை ஆழ்ந்து சிந்திப்போம். நமது இல்லம் ஒரு ஆலயம். நமது வீட்டிலும் பல தூயவர்கள் தோன்ற நாம் விரும்ப வேண்டும். அதற்கு விசுவாசமும் உறுதியும் அப்பழுக்கற்ற நல்வாழ்வும் தேவை.

"என் மக்கள் உண்மைக்கேற்ப நடக்கின்றனர் என்ற கேள்விப்படுவதை விட மேலானதொரு மகிழ்ச்சி எனக்கில்லை ." ॰111 அருளப்பர் 4)



# 2. அதிசய இளைஞன்

“மகனே நீ ஞானத்தை விரும்புவாயாகில் நீதியைக் காப்பாற்று, கடவுள் உனக்கு அதை அளிப்பார்” ᵞசீராக்: 133)

***மாய வலையில் விழாத தலைவன்***

சிறுவயதிலிருந்தே உயிரூட்டமுள்ள விசுவாசம் பெர்தினாந்திடம் மிக ஆழமாக வேரூன்றி இருந்தது. எனவேதான் இளவயதில் பல புதுமைகளைச் செய்தார். 15 வயதுவரை பெற்றோருடன் இருந்தார்.

சாங்கோ அரசன் தீயநெறியாளன். தன் பக்கம் வாலிபர்களைத் திரட்ட, பணத்தையும், பதவிகளையும், பொருட்களையும், உல்லாச வாழ்க்கையையும் கொடுத்து தன் படையில் சேர்ந்து தனக்கு அடி பணிந்து பாவவாழ்க்கை நடத்த பல இளைஞர்களை ஊக்குவித்தான். ஆனால் நம் தூயவரோ அவன் விரித்த பேயின் வலையில் விழவில்லை . பட்டம், பதவிகளை உதறித்தள்ளியதோடு தீயவரின் நச்சுரைக்கு அவர் சிறிதும் இடம் அளிக்கவில்லை - எரியும் விளக்கில் வீழ்ந்து மடியும் விட்டிலாகவும் இல்லை .

***சாத்தானை விரட்டிய சாந்தசீலன்***

திருப்பலிக்கு பெர்தினாந்து தினந்தோறும் உதவி செய்து வந்தார். ஒருநாள் அலகை, கோர உருவத்தில் ஆலயத்தில் அவர்முன் தோன்றியது. நடுங்கினார். ஆனால் சற்றும் தயக்கமின்றி சிலுவை அடையாளத்தை பளிங்குத் தரைமீது வரைந்தார். அவ்வடையாளம் தரைமீது பதிந்து விட்டது. அதனை இன்றும் காணலாம். பேயும் “ஐயோ” என அலறி ஓட்டம் பிடித்தது. அதைக்கண்ட குருவானவர் வியந்தார். இத்தகைய சிறுவன் பிற்காலத்தில் பெரும் புனிதனாவான் என் நெஞ்சார், வாயார வாழ்த்தினார். அந்தோணியார் பேயை பீடத்தின் முன் கட்டி விட்டதாகவும், திருப்பலி முடிந்ததும் குருவானவர் அதன் மீது தீர்த்தம் தெளிக்க, துர்வாடையுடன் புகை மண்டலத்தோடு பேய் ஓடியதாயும் சில வரலாற்று நூல்களில் எழுதப்பட்டுள்ளது.

இப்புதுமை விஸ்பனில் பரபரப்பை ஏற்படுத்தியது. மக்களின் மனதை, மிகவும் கவர்ந்தது, சிறுவன் பெர்தினாந்து பூசை உடுப்பு அணிந்து பக்தியுடன் பூசைக்குச் செல்வது போன்ற ஒரு சொரூபம் லிஸ்பன் ஆலயத்தில் வைக்கப்பட்டுள்ளது. அதனை இன்றும் காணலாம்.

### உடைந்த குடம் ஓட்டுதல்

ஒரு சிறுமி தண்ணீர் எடுத்து வந்த குடம் கீழே விழுந்து உடைந்துவிட்டது. அவள் எஜமானி கடுமையானவள். சிறுமி அழுதாள். பெர்தினாந்து அவள் மேல் இரக்கமுற்று உடைந்த துண்டுகளைப் பொருத்தினார். குடம் ஒட்டிக்கொண்டது. சிறுமியும் மகிழ்வுடன் சென்றாள். இதனைப் பார்த்த மேலாளர், "என்ன விசுவாசம்! என்ன பக்தி!" என வியந்ததோடு பலரிடம் இதைப் பற்றிச் சொல்லி பரமானந்தம் அடைந்தனர்.

### குருவிகள் பணிந்தன!

பெர்தினாந்தின் தந்தை மார்த்தீன் நம் புனிதரை வயல் காவலுக்கு அனுப்பினார். அங்கு விளைந்த கதிர்கள் ஏராளம். ஆயிரக் கணக்கான குருவிகளின் தொல்லை. காலைவேளை திருப்பலி சமயம். திருப்பலிக்குச் செல்ல வேண்டுமென்பது சிறுவனின் ஆசை. "தந்தை கட்டளையை எவ்வாறு மீறுவது"? என்ற தயக்கம். ஆனால் நம்பிக்கை பிறந்தது?

"வான் தூதர்களே நான் கோயில் செல்ல வேண்டும் தந்தைக்கும் பணிய வேண்டும். இந்தக் குருவிகளை மாளிகைக்குள் அடைத்து வையுங்களேன்" என மன்றாடினார். அத்தனை குருவிகளும் மொத்தமாய் மாளிகைக்குள் புகுந்தன. அவரும் ஆலயம் சென்றார். தந்தை வயலுக்கு வந்தபோது மகனை அங்கே காணவில்லை. நடந்ததை அறியாத தந்தை பூசை முடிந்து ஆனந்தமாக வெளியே வந்த மகனை கடிந்து கொண்டார். பின்னர் மாளிகையினுள் குருவிகள் அமைதியாக இருந்ததையும் அங்கிருந்த தானியத்தை உண்ணாததையும் கண்ட தந்தை இத்தகைய மகனைத் தனக்கு அளித்த சர்வேசுரனுக்கு நன்றி செலுத்தினார்.

### உன் இதயம் எனக்கே தருவாயா?

ஒரு குளிர் கால மாலையில் ஐந்து வயது அந்தோணியார் தன் வீட்டின் அறைக்குள் இருந்தார். கதவு தட்டப்படும் ஓசை, கதவைத் திறந்தார். அழகு மிகும் ஐந்து வயது பாலகன் தன் முன் நிற்கக் கண்டார். அந்த திவ்விய மழலை குழந்தை, பிச்சைக்காரனைப்போல் ஒரு பையை தோளில் போட்டவாறு அவர் முன் நின்றது.

நமது பெர்தினாந்து, "உனக்கு என்ன வேண்டும்?" "பிச்சை " "பசிக்கவில்லையா ரொட்டி வேண்டாமா? "என் பசி வேறு, உன் பசிவேறு" "அப்படியானால் உனக்கு என்ன தான் வேண்டும்" "இதோ என் பையைப்பார்" "என்ன சிவப்பு வைடூரியங்கள் மின்னுகின்றனவே?" "இவை நல் இதயங்கள். இவற்றையே நான்

தேடிச் செல்கிறேன்" "அப்படியானால், நீ யார்? "ஆம் நான் குழந்தை இயேசு! உன் இதயத்தை எனக்குத் தருவாயா? என்றுமே தருவாயா?" "ஆண்டவரே! நீரே எனக்கு எல்லாம். என் இதயம் உமக்கே! உம் அரசு வருக! எல்லாம் உம் செயல்" குழந்தை மறைந்தது.

பிள்ளைகளே, ஆண்டவருக்குள் பெற்றோருக்குக் கீழ்ப்படிந்திருங்கள் இதுவே முறை. "தாய் தந்தையைப் போற்று" என்பதே வாக்குறுதியோடு கூடிய கட்டளைக்குள் முதலாவது. "அப்போது மண்ணுலகில் நீ நலம் பெறுவாய், நீடுழி வாழ்வாய்" என்பது அவ்வாக்குறுதி.

தந்தையரே, உங்கள் பிள்ளைகளுக்குச் சினமூட்டாதீர்கள். அவர்களை கண்டித்து திருத்தி, ஆண்டவருக்கேற்ற முறையில் அறிவு புகட்டி வளர்த்தல் வேண்டும்.

"தன் தாய் தந்தையரிடமிருந்து யாதொன்றை அபகரித்தும், அது பாவமில்லை என்கிறவன், கொலை பாதகத்தின் பங்காளியாய் இருக்கிறான்" (பழமொழி 28.1.24) திருச்சபையின் தூயவர். பெர்தினாந்து என்ற அந்தோணியார் இறுதிவரை பெற்றோருக்கும் துறவறமடத்து மேலாளருக்கும் கீழ்ப்படிந்தே வாழ்ந்தார். அவரிடம் அகந்தை என்பதே இல்லை.

# 3. துறவு நிலை

"கடவுளுக்கு பயந்து நடப்பவனை விடப் பெரியவன் எவனும் இல்லை " (சீராக் : 10.⁚.27r

### சர்வேசுரனின் குரல் கேட்ட இளைஞன்

சாமுவேல் சிறு பாலன். அவனது அன்னை அன்னாள் ஆலயப் பணிக்கு அவனை அர்ப்பணித்தாள். அவன் துயிலும் போது சர்வேசுரன் அவனிடம் பேசினார். அவன் "ஆண்டவரே பேசும் உம் அடியான் கேட்கிறான்" (1சாமுவேல் 3.⁚.10) என பதிலளித்தான். எத்துணை இனிய பதில்! நாம் ஆண்டவரை நம் இதயங்களில் பேசவிட்டுக் கேட்கிறோமா? ஆனால் பெர்தினாந்து சர்வேசுரன் குரலைக் கேட்டார். துறவு மேற்கொள்ள முடிவு செய்தார். பெற்றோர். தயங்கினர். பக்திமிக்க அவர்கள் பெரும் தியாகம் செய்து தன் மகனை கடவுளுக்கு அர்ப்பணித்தனர். முதற் கனியை அளித்த மட்டற்ற மகிழ்ச்சி அவர்களுக்கு . ஆம்! தியாகத்தில் தான் மகிழ்ச்சி உள்ளது. "அவர் பொருட்டு அனைத்தையும் இழந்து விட்டேன் எல்லாவற்றையும் குப்பை எனக் கருதுகிறேன்." (பிலிப்பியர் 3.⁚.8)

பெர்தினாந்தும் தூய சின்னப்பரைப் போல் யாவற்றையும் துறந்தார். துறவற மடத்தை நோக்கிப் புறப்பட்டார்,

### அகஸ்தீனார் மடம் புகுதல்

1210ஆம் ஆண்டு, பட்டணத்திற்கு வெளியே இருந்த வின்செந்தே தேபோரா என்ற அகஸ்தீனார் குருமடம் புகுந்து அங்கு வேதாகமப் படிப்பில் முதன்மையான மாணவராயிருந்தார். குருமட ஒழுங்குகளுக்குப் பணிந்து அமைதியான வாழ்க்கை நடத்திய அவரை நன் மாணவன் என யாவரும் புகழ்ந்தனர். துறவறவாழ்வு சபல மனப்பான்மை உள்ளவர் களுக்குக் கடினமானது. பெர்தினாந்திற்கு அதுவே இனிமையாக இருந்தது.

### துறவியின் பிணி தீர்த்த அன்பன்

இவர் குருமடத்தில் பல சிறிய வேலைகளைச் செய்து வந்தார். பெருக்குதல், பாத்திரங்களைக் கழுவுதல், கழிவிடங்களை சுத்தம் செய்தல், பிணியாளர்களைக் கவனித்தல் போன்றவற்றை இன்முகத்துடனே செய்தார். அந்த குருமடத்தில் ஒரு துறவி பசாசினால் மிகவும் அவதியுற்று தன்னம்பிக்கை இழந்தார். பசாசு அவரை பயமுறுத்தியது. இதை பெர்தினாந்து அறிந்து நோயாளிகளின் மீது தன் மேலாடையைப் போர்த்தினார். துறவி கீழே விழுந்து புரண்டார். துர்நாற்றத்துடன் புகைப்படலம் கிளம்பி கிடுகிடு என்று நடுங்கி பேய் மிரண்டு ஓடியது. துறவி நலமடைந்தார். நன்றி நவின்றார்.

“நன்றி தனக்கல்ல, சர்வேசுரன்க்கே” என தூயவர் அறிவுரை கூறினார்.

**ஆலயச்சுவர் விலகியது**

ஒரு நாள் திருப்பலி வேளையில் நம் புனிதருக்கு தோட்டவேலை, நடுப்பூசை வேளை மணி ஒலித்தது. முழங்கால் படியிட்டார். ஆலயச்சுவர் விலகியது எழுந்தேற்றத்தின் போது சர்வேசுரனைக் கண்டார். பெரும் மகிழ்வு கொண்டார். மீண்டும் சுவர் முன்போலாகியது சபை முதல்வரிடம் இது பற்றிக் கூறினார். அவரும் அமைதியுடன் அனைத்தையும் கேட்டு மனத்தில் வியப்படைந்தார் சர்வேசுரனின் அடியார்களால் முடியாதது தான் என்ன?

**அழகில் ஆண்டவனைக் கண்டவர்**

ஆலயத்தில் ஒரு அழகிய பெண்ணொருத்தி நின்றாள். பெர்தினாந்து அவளை இமை கொட்டாமல் பார்த்து நின்றார். சக துறவிகள் எரிச்சலால் மேலாளரிடம் புகார் செய்தனர். அவரும் காரணம் கேட்டார். “ஒரு பெண் இவ்வளவு அழகாக இருந்தால், அவளைப் படைத்த கடவுள் எவ்வளவு அழகாய் இருக்க வேண்டும் என நினைத்தேன்” என்று பதிலுரைத்தார்.

அனைவரும் அவரது பதிலைக் கேட்டு வியந்தனர். தீய எண்ணத்துடன் பெண்களை நோக்குபவர்கள் நமது புனிதரைப்போல எண்ணுவார்களா? இவ்வித மேலான எண்ணம் பாவ இச்சைகளை அகற்றுமல்லவா?

**பசிதீர்த்த அற்புத உணவு**

படி உலகில் போட்டி, பூசல் பொறாமை… என்பன எங்கும் உள்ளன. அந்தோணியார் சர்வேசுரனின் அடியவனாக வாழ்ந்தவர். எனவே பிறரின் ஆன்ம ஈடேற்ற அலுவலில் அக்கறையுடன் தன் உணவையும் ஓய்வையும் பாராது, தன் வாழ்க்கையையே அர்ப்பணித்தார். இவரது உடன் துறவிகளும் இவர் மீது பொறாமை கொள்ளாமலில்லை. மட்டற்ற பொறுமை, அளவற்ற ஞானம், வேதாமக அறிவு பெற்ற இவரை மடத்து தலைவரும் மட்டத்தட்ட எண்ணினார். எனவே ஒரு நாள் அந்தோணியார் ஆன்மீகப் பணி செய்து வரும் முன்னரே, இவர்கள் மடத்தின் உணவினை சாப்பிட்டு முடித்து விட்டனர். அந்தோணியார் சாப்பிட வந்த போது மேசை மீது எந்த உணவும் இல்லை. மேசை மீது துணியை விரித்து செபித்தார். விதம் விதமான உணவுகள் அங்கு வந்தன. தானும் உன் மற்றவர்களுக்கும் கொடுத்தார். சர்வேசுரன் அவரை என்றும் கைவிட்டதே இல்லை. ஏனெனில் அவர் எதைக் குடிப்போம்? எதை உண்போம்? எதை உடுப்போம்? என்று கவலைப்பட்டவரல்ல. அவரது ஆலயங்களில் அசனம் இன்றும் ஏராளமாக நடைபெற்று வருகிறது. அந்தோணியாரை வந்திப்பவன் சந்தோஷமாய் வாழ்வான்.

**கடலைக் கடத்தல்**

கடற் பயணமொன்றில் ஒரு தீவை அடைந்த துறவிகள் புனிதரை தீவில் விட்டு விட்டுத் திரும்பி விட்டனர். இயற்கையில் சர்வேசுரனைக் கண்டு மெய்மறந்து பின் தங்கி விட்ட, தன்னிலையடைந்த தூயவர் தனது மேலாடையைக் கடலின் மீது போட்டு செபிக்க அது அவருக்கு தோணியாகியது. அவர்கள் வந்து சேரும் முன் தேவ அருளால் தூயவர் அக்கரை அடைந்தார். கரை சேர்ந்த நண்பர்கள் அங்கு அவரைக் கண்டு வியப்படைந்தனர்.

**கோயிம்பிரா செல்லுதல்**

அவரது உற்றாரும், நண்பர்களும் அவர் சொந்த ஊரில் இருந்ததினால், அடிக்கடி அவரைப் பார்த்திடச் சென்றனர். தனது துறவுநிலைக்கு இது சற்றும் ஒவ்வாது என அவர் எண்ணினார். எனவே தொலைவிலுள்ள ஒரு மடத்திற்கு தன்னை மாற்ற வேண்டுமென்று வேண்டினார். ஆகவே லிஸ்பனிலிருந்து வடக்கே நூறு மைல்களுக்கு அப்பால் உள்ள கோயிம்பிரா பட்டணத்திற்கு அனுப்பினர்.

இந்நகரம் மன்னரின் தலைநகர். எழில்மிகு மாந்திகோ நதி இங்கு ஓடுகின்றது. கோயிம்பிரா துறவியர் இல்லம் திருச்சிலுவைக்கு அர்ப்பணிக்கப்பட்டு இருந்தது.

அந்த இடத்தில் வாழ்ந்த மூர் என்ற மிலேச்ச சாதியாரை ஓட்ட மன்னன் எட்டாவது அல்போன்ஸோ, சிலுவை அடையாளமிட்ட கொடி தாங்கி போர் புரிந்தான்.

ஸாநவாஸ்தேதோலோஸோ என்ற இடத்தில் மன்னன் பெரும் வெற்றி பெற்றான். கோயிம்பிரா வந்து நன்றி செலுத்தினான். இதனை நேர்முகமாகக் கண்டு, நம் புனிதர் திருச்சிலுவைமீது பக்தி மிக்கவர் ஆனார். அசிசி பிரான்சிசும் இதற்குப் பின் தன் சபைத் துறவிகள் யாவரும் "திவ்விய இயேசுவே உம்மை இங்கும் உலகில் உள்ள எல்லா ஆலயங்களிலும் ஆராதிக்கிறோம் உம்மை வாழ்த்துகிறோம் ஏனென்றால் உமது தூய சிலுவையால் உலகை மீட்டு இரட்சித்தீர்" என்ற செபத்தைக் கண்டிப்பாய் செய்ய வேண்டும் என்று கற்பித்தார்.

இச்செபம் திருச்சிலுவைப் பாதையில் சேர்க்கப்பட்டிருப்பதை நாம் அறிவோம்.

நாட்டில் ஏற்பட்ட சூழ்நிலையில் ஆயர் ஒருவரும் சில துறவிகளும் மன்னர் பக்கம் சேர்ந்தனர். பாப்பிறை இவர்களுக்கு தண்டனை வழங்கினார். நம் புனிதர் திருச்சபையின் தலைவருக்கு தாழ்ந்து பணிந்தவராகவே செயல்பட்டார் ஒன்பது ஆண்டுகள் உருண்டோடின.

**குருப்பட்டம்**

1219ஆம் ஆண்டு தனது 24ஆம் வயதில் பெர்தினாந்து குருப்பட்டம் பெற்றார். ஆயினும் சமையல் வேலை போன்ற மிகச் சிறிய வேலைகளை செய்து வந்தார். ஆனால் “கடவளுக்குப் பயந்து நடப்பவனைவிட பெரியவன் எவனுமில்லை “. (சீராக். 10127) என்று புனிதரின் வாழ்க்கை எடுத்துக் காட்டுகிறது.

# 4. பெர்தினாந்து அந்தோணியாராதல்

“நானோ கைவிடப்பட்டளவள், தனியாளாய் இருக்கிறேன். அமைதியின் ஆடையைக் களைந்து விட்டேன். தவத்துக்கு உரிய மயிராடையை உடுத்துக்கொண்டேன். என் வாழ் நாளெல்லாம் உன்னதரை நோக்கி ஓலமிடுவேன்” (பாரூக் 4.:19-20)

***பிரான்சிஸ்கன் சபை***

துறவறச் சபைகளில் மிகவும் சிறப்புற்றது அசிசியாரின் பிரான்சிஸ்கன் சபை. சிலுவையில் அறையப்பட்ட இயேசுநாதர் ஒருநாள் பிரான் சிசைத் தழுவினார். இதனால் ஆண்டவரின் ஐந்து காயங்கள் அசிசியாரின் உடலில் பதிந்தன. இது முதல் அவர் ஐந்து காய பிரான் சீஸ் என அழைக்கப்படலானார். இதே சபைக் குருவானவர் பத்ரோ பீயோ அடிகளும் ஐந்து காயங்களைப் பெற்றவர். இவர் அண்மையில் காலமானார். புரிசுத்த பாப்பரசர் 2வது அருள் சின்னப்பர் பாப்பிறையானதும் அசிசி மாநகர் சென்று திருத்தலங்களைப் பார்வையிட்டார். இத்தாலி மக்களுக்கு மிகப் பிரியமான நகர் அசிசி. “ அசிசியாரின் ஏழ்மை , இறைப்பற்று, மறை பரப்புப் பணி மீதான ஆவல், ஈகை இக்காலத்தில் மிகத் தேவை” என அப்பொழுது மக்களுக்கு அறிவுறுத்தினார்.

அசிசியாரை எல்லா மத்தினரும் போற்றுகின்றனர். பறவைகள், விலங்குகள் அவரின் சகோதர சகோதரிகள். இவர் ஒரு ஜவுளி வியாபாரியின் மகன். வாலிப வயதில் ஆடம்பர, வீர வாழ்வில் அவரது மனம் வட்டமிட்டது. நண்பர்களுக்கும் குறைவில்லை . அவரது குதிரையின் காலடிபடாத இடமே இல்லை எனலாம். இச்சந்தர்ப்பத்தில் இவர் வாழ்வில் ஒரு திருப்பம் ஏற்பட்டது, பிணியுற்றார். தேவ அருளால் குணமடைந்த பின் சான் தமியோனோ ஆலயத்தில் ஒரு தினம் அவர் உருக்கமாய் செபம் செய்து கொண்டிருந்தபோது பாடுபட்ட சுரூபத்திலிருந்து ஒரு குரல் எழும்பியது.

“என் பாழடைந்த ஆலயத்தை பிரான் சீஸ் நீ கட்டி எழுப்ப மாட்டாயா?” என்பதே அக்குரலொலி. அதற்கு செவிசாய்த்த அவர் தன் கடையிலிருந்த துணிகளை விற்றுப் பொருள் சேர்த்தார். தந்தை மகனைக் கடிந்தார். அசிசியார் ஆண்டகையிடம் முறையிட்டார். “இனிமேல் என் தந்தை இறைவனே என உரைத்து தந்தையார் தந்த உடைகளை அவரிடமே அளித்தார். ஆண்டகையிடமிருந்து காக்கி உடைகளைப் பெற்று அணிந்து சர்வேசுரனுக்கு தன்னை முழுவதும் அர்ப்பணித்து அவர் விட்ட வழியே சென்றார். பெரும் சீமாட்டியான கிளாரம்மாளும் யாவற்றையும் துறந்து அவர் பின் சென்றாள். மகளிருக்கு துறவற மடங்கள் ஏற்படுத்தப்பட்டன.

## ஆப்பிரிக்காவில் வேதசாட்சிகள்

1219ஆம் ஆண்டு பெராடு, பீட்டர், அட்ஜித்தாஸ், அக்கூர்ஸியுஸ், ஓட்டே என்ற ஐந்து பிரான்சிஸ்கன் சபை துறவிகள் கோயின் பிரா மடத்தில் ஒரு நாள் தங்கினர். பெர்தினாந்து அவர்களுக்கு பணிவிடை செய்தார். இவர்களிடமிருந்து பெர்தினாந்து அசிசியாரை பற்றியும் அவரது சபையைப் பற்றியும் அறிந்தார். செல்வந்தரான அசிசியார், கிளாரம்மாள் துறவு பூண்ட நிகழ்ச்சி அவரது மனதைக் கவர்ந்தது. பின்னர் இவர்கள் 1220 ஜனவரி 26ல் ஆபிரிக்காவில் தேவசாட்சிகளாயினர். அவர்களின் எலும்புகளை தோன் பெத்ரோ என்ற கோமகன் கோயம்பிரா எடுத்து வந்தார். அகஸ்தீனார் சபை துறவி ஜாண் ராபட்டிற்கு அவற்றை அன்பளிப்பாக அளித்தார். வேதசாட்சியாக வேண்டுமென்று அவர் அவாவுற்றார். ஒரு தினம் இரு அசிசியார் சபைத் துறவிகள் பிச்சை கேட்டு கோயிம் பிரா மடம் வந்தனர். தானும் அவர்கள் சபையில் சேர விரும்புவதாக அவர் தெரிவித்தார். இது பற்றி பிரான்சிஸ்கன் சபை மேலாளருக்கு அறிவிக்கப்பட்டது. அவரும் மனம் இசைந்தார். ஆனால்

மலாளர் இணக்கம் தரவில்லை - அகஸ்தீனார் சபை பிறநாட்களில் வேதபோதக அலுவலை மேற்கொள்ளவில்லை. கல்வி நிலையங்களை அவர்கள் நடத்தி வந்தனர். ஆலயத்திருப்பணியும், வழிபாடுகளும் நடத்தி வந்தனர். வேத சாட்சியாக வேண்டுமென்று பெர்தினாந்தின் ஆவல், அகஸ்தீனார் சபைத்தலைவரை அசைய வைத்தது. அவரும் தன் சபையை விட்டு, பிரான்சிஸ்கன் சபையில் பெர்தினாந்து சேர அனுமதி வழங்கினார். ஒரு நாள் அசிசியார் சபைத் தலைவரும் அகஸ்தீனார் சபை மேலாளரும் ஒன்று கூடினர். பிரான்சிஸ்கன் சபை அங்கியைப் பெர்தினாந்து பெற்றார். பிரான் சீஸ் சபைத் தலைவரிட மிருந்து அகஸ்தீனார் சபை வெள்ளை அங்கியை அகஸ்தீனார் மேலாளரிடம் கொடுத்தார்.

பெர்தினாந்தும் வேதசாட்சியாக விரும்பி அசிசி பிரான் சீஸாரின் சபையில் சேர்ந்தார். பெர்தினாந்து செல்லும் முன் ஒரு உடன் துறவி கிண்டலாக “நீ கட்டாயமாக புனிதராவாய்” என்றார். அதற்கு அவர், “நான் தூயவரானதைச் செவியுறும்போது நீர் சர்வேசுரனுக்குப் புகழ் உரைப்பீர்” என்றார். அவர் சொல்லியவாறே 1220ஆம் நாள் அவர் பிரான்சிஸ்கன் சபையில் சேர்ந்து “அந்தோணியார்” என்ற பெயர் சூட்டப் பெற்றார். இவ்வாறு பெர்தினாந்து அந்தோணியாரானார்.

அக்காலத்தில் பிரான்சிஸ்கன் சபையில் சேருபவர் தன் பழைய பெயரை விட்டு புதிய பெயர் எடுப்பதில்லை ஆனால் பெரும் துறவியாக விரும்பிய பெர்தினாந்து மாபெரும் மாமுனிவரான வனத்து அந்தோணியார் பெயரை தமக்கு சூட்டிக் கொண்டார். நாமும் இனி அவரை அந்தோணியார் என்றே அழைப்போமாக.

**ஆபிரிக்கா பயணம்**

ஆபிரிக்காவிலுள்ள சாரசன் சாதியாரை மனம் திருப்ப துறவிகள் அனுப்பப்பட வேண்டுமென மூன்றாவது ஓனோரியஸ் என்ற பாப்பரசர் அறிவித்தார். 1220 நவம்பரில் அந்தோணியார் மொராக்கோ புறப்பட்டு 1221ஆம் ஆண்டு கோடை காலத்தில் சேர்ந்தார். அங்கு பிணியுற்று படுக்கையிலானார். பிலிப்பினோ என்ற சகோதரன் அவரை கவனித்து வந்தார். இவர் அரசியால் அனுப்பப்பட்டவர். காய்ச்சல், உடல்வலி நீங்கியதும் தாயகம் திரும்ப வேண்டும் என்ற ஆணை பிறந்தது. வேத சாட்சியாகும் பேறு அவருக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் பணிந்து திரும்பினார். கடல் கொந்தளிப்பால் கப்பல், சிசிலித்தீவை அடைந்தது. இங்குள்ள சகோதரர்கள் அவரை நன்கு பேணிக்காப்பாற்றினர். பிணியும் நீங்கியது. இவ்வாறு அவர் இத்தாலி நாடு வந்தார்.

**உப்பு நீர் சுத்த நீராகியது**

சபை மேலாளர் வெளியூர் சென்றார். மடத்தின் கிணற்றுநீர் உப்பு நிரம்பி இருந்தது. இதனால் துறவிகள் வெளியில் சென்று நீர் கொண்டுவர வேண்டியதாயிற்று அந்தோணீயார் கிணற்று நீரை சுத்த நீராக்கினார். திரும்பி வந்த தலைவர் நடந்ததை அறிந்தார்.

“துறவிகள் வெளியே சென்று தண்ணீர் கொண்டு வந்தால் என்ன கெட்டுவிடும்?“ என வெகுண்டு, அந்தோணீயாரை தனியறையில் அடைத்தார். கசையால் தன்னை அடித்து வாதனை செய்ய வேண்டும் என்று பணித்தார் சபை மேலாளர். நம் புனிதர், அறிவியல் மேதை - தாழ்ச்சியின் கண்ணாடி என்று அறிந்தாரில்லை, அந்தோணியார் பதில் எதுவும் பேசவில்லை.

அவர்மீது எந்த தப்பிதமும் இல்லை . “நீ தவறிப் போகாதபடி உன் வார்த்தைகளில் கவனமாயிரு” (சீராக் 1.:.38)

“விசுவாசத்திலும் சாந்தத்திலும் அவரைப் புனிதராக்கினார்” (சீராக் 45.:.4)

ஆம்! அந்தோணியார் சர்வேசுரனால் புனிதராகத் தெரிந்து கொள்ளப்பட்டவர்!

ஆகவே தான், சேர்ந்தது அகஸ்தினார் சபை புகுந்தது அசிசியார் சபை! சென்றது மொராக்கோ வேதசாட்சியாக, வந்தது பிணி, அதற்கெதிராக! புறப்பட்டது போர்த்துக்கல்லுக்கு! அடைந்தது, சிசிலித் தீவுக்கு!

இதுதான் சர்வேசுரனின் திருவுளம்.

# 5. மெஸினாமடத்தில் மறைந்த வாழ்வு

"மனிதன் மீது நம்பிக்கை வைப்பதை விட ஆண்டவரிடம் தஞ்சம் புகுவதே நலம்" (சங் 117.∵.8)

**வட இத்தாலி செல்லுதல்**

பிரான்சிஸ்கன் சபை விரைவில் அதிக வளர்ச்சி அடைந்தது. சபை மாநாடு ஒன்று கூட்ட ஆயத்தம் செய்யப்பட்டது. சபைத் துறவிகள் அனைவருக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது. சபை அமைப்பாளரான தூய அசிசி பிரான்சீஸ், தன் துறவிகளை நேரில் பார்த்திட விரும்பினார். அவர்கள் எவ்வாறு வாழ்கின்றனர்? என்ன சேவை செய்கின்றனர்? அவர்களுக்கு நேரிடும் துயர், தடங்கல்கள் எவை? என்பதை நேரில் அறிய விரும்பினார். தேவையான அறிவுரைகளை வழங்கிட அவர் ஆவலாய் இருந்தார். சுபாஸியோ சமவெளியை அடுத்து போர்சியுங்குலா ஆலயம் இருக்கிறது. இது அசிசியாருக்கும் மிகவும் பிடித்தமான இடம். இவ்விடத்தில் அவர் பல போராட்டங்களுக்கு விடை கண்டார். பிரச்சனை களுக்கும் தீர்வு கண்டார் தனிமையில் இனிமை பெற்றார். இலத்தலம் பிரான்சிஸ்கன் சபை தொட்டில் என அழைக்கப்படுகிறது.

இங்கு வருடம் இருமுறை இஸ்பிரித்து சாந்துவுயானவர் திருநாளன்றும், அதிதூதர் தூய மிக்கேல் திருநாளன்றும் துறவிகள் ஒன்று கூட வேண்டும் என்பது அவரின் விருப்பம். ஏற்கனவே இத்தகைய மூன்று மாநாடுகள் நடைபெற்றிருந்தன. அவை 1217, 1219, 1221 ஆகிய ஆண்டுகளில் நடந்தேறின. அவற்றில் 1221ம் ஆண்டு நிகழ்ந்த மாநாடு இஸ்பிரித்து சாந்துவுயானவர் திருநாளன்று நடந்தது. இது பிரான்சிஸ்கன் சபை வரலாற்றில் தனிச் சிறப்புப் பெற்றது.

மெஸினாவில் சபையின் பொதுக்கூட்டம் 1221 மே திங்கள் 30ல் போர்ஸியுஸ் கோலாவில் நடக்க இருப்பதை அந்தோணியார் அறிந்தார். உடல் நலம் குன்றியிருந்த அவர் சபைத் தலைவரான அசிசி பிரான் சீஸை நேரில் பார்த்திட அங்கு சென்றார். 3000 பேர் கூடினர். அந்தோனியாரை யாருமே அறியவில்லை. அவரும் தன்னை யாரென்றும் வெளிப்படுத்தவும் இல்லை.

மாநாட்டுத் திருப்பலியில் அசிசியார் திருக்கோனாகச் செயல்பட்டார். மறை உரையும் ஆற்றினார். அது வருமாறு : "இவ்வுலக துன்ப துயரங்கள் குறுகியவை. பரலோக இன்பம் முடிவில்லாதது. சர்வேசுரனின் திருக்கொடைகளில் நம்பிக்கை வையுங்கள். திருச்சபை, நமது தாய். அவளை என்றும் மதித்து அவளுக்குக் கீழ்ப்படியுங்கள். உங்களிடம் ஒருவருக்கொருவர் சகோதர அன்பு காணப்பட வேண்டும். எல்லா மனிதருக்காகவும் மன்றாடுங்கள். உங்கள் அனைவருக்கும் தூய கீழ்படிதலின் பேரால் நான் உத்தரவிடுவது : உணவு, பானம், பிற தேவைகளைப் பற்றி கவலையுறாதீர். எந்த ஒரு

காரியத்திலும், செபத்திலும் கடவுளை வாழ்த்துங்கள். உங்கள் உடலைப் பற்றிய கவலையே வேண்டாம். ஏனெனில் சர்வேசுரன் உங்களை உருக்கமாய்க் கவனித்து வருகின்றார்"

இந்த மாநாட்டிற்குத் தூய சுவாமிநாதர் வந்து இருந்தார். தூய சுவாமிநாதரும், அசிசியாரும் நண்பர்கள். அசிசியார் கடின கட்டளையைக் கேட்டு அதிசயமடைந்தார். இத்தனை ஆயிரம் துறவிகளின் உணவிற்கு இவர் எங்கே போவார்? என சிந்தித்தார். உணவுகளுக்கு வேண்டிய பொருட்களை மக்கள் ஏராளம் கொண்டு வந்திருந்தனர். ஜெர்மெனிக்கு வேத போதக அலுவல் செய்ய துறவிகளை அசிசியார் தெரிந்து அனுப்பினார். அந்தோணியார், தூய அசிசியாரின் மகிமைக்கு முன் தன் வாழ்வு வெறும் உப்புச் சப்பற்றது என எண்ணினார். எனவே அசிசியாரை அணுகவில்லை. தான் யாரென்று அறிவிக்கவுமில்லை அசிசியாரை நேரில் பார்த்ததில் மகிழ்ச்சியடைந்தார்.

மறைந்த வாழ்க்கையைப் பற்றி பிற்காலத்தில் அந்தோணியார் எழுதியதாவது, "நாம் பிச்சைக்காரர்களைப் போல் செயல்படுவோம். சிலர் நல்ல ஆடைகளை மறைத்து கந்தையணிந்து யாசகம் கேட்கின்றனர். நமது நல்லியல்புகளை மறைத்து, குற்றங்களையும் தவறுகளையும் வெளிக்காட்டினால் தேவ அருள் என்ற பிச்சையை சர்வேசுரன் இடுவார்"

இஸ்பிரித்து சாந்துவுயானவரின் திருநாளன்று பொது அமர்வு நிகழ்ந்தது. முன் கூறியது போல் புனிதர், அசிசி பிரான் சிஸைக் கண்டாரெனினும் இருவரும் நேர்முகமாக சந்திக்கவில்லை. ஏனெனில் அசிசியார் நோய் வாய்ப்பட்டு இருந்தார். பேச வேண்டியவைகளை சகோதரர் எலியாசே பேசினார். சில துறவிகளுடன் அசிசி அண்ணலார் அளவளாவினார். அவர் அளவளாவுமளவு அந்தோணியார் அன்று புகழ் பெறவில்லை . கூட்டம் முடிந்து எல்லோரும் புறப்பட்டு விட்டனர். அவரை எவரும் அழைத்துச் செல்லவில்லை. கிராஸியான் துறவி அங்கு வந்தார். அந்தோணியார் அவரிடம் தன்னை யாரும் அழைத்து செல்லவில்லை - எனவே மடத்துச் சட்டங்களைப் பயின்றிட தன்னை அவருடன் ரொமாக்னா பட்டணம் அழைத்துச் செல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். "தன்னைத் தாழ்த்துகின்றவனுடைய வேண்டுதல் மேகங்களை ஊடுருவிப் போகும்" (சீராக் 35.:.21) "மனிதன் மீது நம்பிக்கை வைப்பதை விட ஆண்டவரிடம் தஞ்சம் புகுவதே நலம்" (சங் 11718) தனது கல்வி அறிவையும், முன் அனுபவத்தையும் அவர் வெளியிடவில்லை . இளைய துறவி கிராஸியான் நம் புனிதரைக் கவர்ந்தார். அவரைத் தன்னுடன் அழைத்துச் சென்றார். இவ்வாறு அந்தோணியார் வட இத்தாலி நாட்டை அடைந்தார்.

**கடின தவ வாழ்வு**

அருகில் உள்ள மாண்டிபயாலோ ஆசிரமத்திற்குச் சென்று தவவாழ்வு நடத்த ஒப்புதல் கேட்டார். ஒப்புதலும் தரப்பட்டது. துறவிகளின் குடிலைச் சுற்றி அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அளித்த தோட்டமொன்று இருந்தது. “மூன்று அல்லது நான்கு துறவிகள் சேர்ந்து ஒன்றாக வாழவேண்டும், அவர்களில் இருவர் தாயாகவும், மற்றிருவர் பிள்ளைக ளாகவும் இருக்க வேண்டும். முதலிருவர் மார்த்தாளைப் போலும், பின் இருவர் மரிய மகதலேனாளைப் போலும் வாழ வேண்டும். உரிய காலத்தில் கட்டளைச் செபங்கள் அனைத்தும் செய்யப்பட வேண்டும். பிள்ளைகள் தாயிடம் இருந்து உண்ண வேண்டும். தாயைத் தவிர வேறு எவருடனும் பேசக்கூடாது. தினம் மூன்று முறை பேசலாம். இது அசிசியார் வகுத்த விதி. இதன்படி மரிய மகதலேன் அம்மாளாக அந்தோணியார் வாழ்ந்து வந்தார். உடன் துறவி ஒருவரிடமிருந்த குகை ஒன்றில் தவ வாழ்வு நடத்தினார்.

ஒரு சிறு துண்டு ரொட்டியும் சிறிது குடி நீரும்தான் அவரது உணவு.

கடின உடல் வாதனையால் பலவீனமடைந்து அவர் உடல் தள்ளாடியது.

“இரு துறவிகள் அவரைத் தாங்கி மீண்டும் ஆச்சிரமத்தில் விட்டுச் சென்றனர்.

இயற்கை எழில் மிகும் இடங்களில் மாண்டிபயாலோவும் ஒன்று. இது ஒரு குன்றின் மீது அமைந்தது. குன்றின் மேல் நின்றால் அட்ரியாடிக் கடல் வரை பரந்து இருக்கும் ரோமானோ சமவெளி சாட்சியளிக்கும். மேலும் அதிகத் துறவற முயற்சிகளை மேற்கொள்ள துறவியொருவரின் குகையொன்றைத் தேர்ந்தெடுத்து பயன்படுத்தினார். அவரின் இசைவு பெற்று அந்தோணியார் காலையில் பொதுக் கட்டளை செபம் முடிந்ததும் இக்குகைக்கு வந்து விடுவார். ஓரிரு உரொட்டித் துண்டுகள், ஒரு குவளைத் தண்ணீர் அவரது உணவு. இங்கு அவர் வனத்து அந்தோனியாரைப் போன்று மிகக் கடின தப முயற்சிகளை மேற்கொண்டார். மாலையில் மடம் திரும்புவார். ஒன்றில் வேதனைப்பட வேண்டும் அல்லது சாகவேண்டும்” என எழுதியுள்ளார் இஸ்பிரித்து சாந்துவுலா தெரசம்மாள். தவம் செய்ய வேண்டும் என்பது நம் ஆண்டவரின் அறிவிப்பு . தூயவர்கள் எந்த அளவிற்குத் தூயவர்களாயிருந்தனரோ அந்த அளவிற்கு கடின தவஞ் செய்தனர். இதற்கு அந்தோணியாரம் விதி விலக்கல்ல. இக்குகையில் அவருக்கு ஏற்பட்ட பல சோதனைகளை அவர் தவ வலிமை வென்றது.

ஒரு நாள் மேலாளரிடம் முழந்தாப்படியிட்டு, சமையல் அறையை சுத்தம் செய்தல், பாத்திரங்களை கழுவுதல் போன்ற பணியினைத் தான் செய்து, மற்றவர்களுக்கு உதவ உத்தரவு தரவேண்டுமென வேண்டினார். உத்தரவும் கிடைத்தது. குருவானவரான இவர் ஏனைய சாதாரண துறவிகளைப் போல் மன

மகிழ்வுடன் இப்பணிகளைச் செவ்வனே செய்தார். இவ்வாறு அடக்கமுடன் ஏழ்மையாக வாழ்ந்து வந்தார் நமது புனிதர்.

# 6. தாழ்ச்சி தந்த மாட்சி - முதல் மறையுரை

"தன்னை பெரியவர் என்று எண்ணிக்கொள்கிற எவனும் தன்னையே ஏமாற்றிக் கொள்கிறான். ஒவ்வொருவனும் தன்னுடைய நடத்தையை ஆய்ந்து பார்க்கட்டும்" (கலாத் 6.ஃ.3-4)

### குருப்பட்ட வழிபாட்டு நிகழ்ச்சி

பல புனிதர்கள் விண்ணுலகில் உண்டு. இவர்களில் பலர் தானதருமங்கள் எதுவும் செய்யவில்லை . அவர்களின் ஏழ்மை நிலை இதற்கு இடந்தரவில்லை. பல புனிதர்கள் உடலை வாட்டும் வாதனைகள் செய்யவில்லை. அவர்கள் உடல்நிலை அதற்கு ஒத்து வரவில்லை. பலர் துறவிகளாகச் செல்லவில்லை . அவர்கள் குடும்ப நிலை அதற்கு வாய்ப்பளிக்கவில்லை. ஆனால் "தாழ்ச்சி" என்ற புண்ணியத்தை கடைப்பிடிகாத தூயவர்கள் வானுலகில் இல்லை.

தூய்மையும், கற்பு நெறியும் ஒருவரிடம் இருந்தும் அவரிடம் தாழ்ச்சி இல்லையேல் அதனால் வரும் பயன் யாது? என தூய அகஸ்தீனார் அறிவுறுத்தியுள்ளார்.

தூய தோமஸ் அக்வீனாஸ் சொல்வதாவது: "தாழ்ச்சி ஒரு புண்ணியம். அது நல்ல கிரியைகளில் பயன் தருகிறது".

தாழ்ச்சிமிக்க அந்தோணியார் மாட்சியடைய சர்வேசுரன் சித்தமானார். 1222ம் ஆண்டு குருப்பட்டம் அளிக்கும் வழிபாடு போர்லி பட்டணத்தில் நிகழ இருந்தது. சுவாமிநாதர் சபைத் துறவிகளும், பிரான்சிஸ் சபைத் துறவிகளும் பட்டம் பெறும் பட்டியலில் இடம் பெற்றனர். பழைய ஆலயமான தூய மெக்குராலே ஆலயத்தில் ஆயர் ரிக்காரத்தலூஸ் பெல்மான்தி சடங்குகளை நிறைவேற்றினார். குரு பட்டத்திற்கான மறையுரை ஆற்ற அழைக்கப்பட்ட பிரசங்கியார் வரவில்லை. சுவாமி நாதர் சபையினர் தங்களால் இயலாது என தட்டிக்கழித்தனர். அந்தோணியாரின் திறமையை எவரும் அறியவில்லை - யாவரும் மறுத்ததால் அந்தோணியார் மறையுரை ஆற்ற வேண்டுமென மேலாளர் கேட்டுக்கொண்டார்.

பின்பு "அந்தோணியார் மறையுரையாற்ற வேத சாஸ்த்திரம், விவிலியம் இவருக்குத் தளர் பாடமா? ஏதோ சாதாரண அறிவுடைய குருதானே! நமக்குத் தெரிந்தது கூட இவருக்குத் தெரியாதே! வேடிக்கை பார்க்கலாம்" என மற்ற துறவிகள் தமக்குள் சொல்லிக்கொண்டனர். மேலாளர், இவருக்குப் போதுமான மறையியல் அறிவு இல்லையே் இலத்தீன் மொழி தெரியாதே எனத் தயங்கினார். இவற்றில் அவர் மேதை என அவர்கள் அறிந்ததே இல்லை . ஏனெனில் அதனை ஒரு போதும் வெளிப்படுத்தியதில்லை. அந்தோணியார்

தாழ்ச்சியால் உந்தப்பட்டு முதலில் மறுத்தார் பின் பணிந்தார். அந்தோணியார் ஆயரின் ஆசி பெற்று மறையுரை ஆற்ற எழுந்தார்.

**ஆற்றலைக் காட்டிய முதல் மறையுரை**

“அவர் மரண மட்டும் கீழ்ப்படிந்திருந்தார்” என்பது அவர் எடுத்துக் கொண்ட பொருள். முதலில் வார்த்தைகள் மெதுவாய் வந்தன. பின் கடல்மடை திறந்தது போல் வெளிவந்தன. விவிலிய மேற்கோள்கள் விளக்கம், மறையியல் எடுத்துக் காட்டுகள் சரமாரியாக வந்தன. “இஸ்பிரித்து சாந்துவுயானவரின் அருட்கொடை பெற்றவர். மாபெரும் மேதை” என யாவரும் வியந்து பாராட்டினர். அவரது பிரசங்கத் திறமை பற்றிய செய்தி காட்டுத் தீ போல் எங்கும் பரவலாயிற்று, விளக்கை ஏற்றி மரக்காலால் மூடி வைப்பார்களா?

அந்தோணியாரின் பிரசங்க ஆற்றலை கிராசியான் சுவாமிகள் தூய அசிசியாரிடம் அறிவித்தார். அவர் மிகவும் மகிழ்ந்து “எனது சபையில் ஒரு மறை ஆயர் தோன்றியுள்ளார்” என்றார். அது முதல் இவ்விருவருக்கும் நெருங்கிய தோழமை ஏற்பட்டது. தூய அசிசியாரின் வரலாற்றை எழுதியுள்ளார். அதில்

“அந்தோணியார் பிரான்சிஸின் தோழர், மகிமை மிகும் பிதா, பதுவை அந்தோணியார் புனித பிரான்சிஸின் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சீடரில் ஒருவர். அவரை பிரான்சிஸ் எனது மறை ஆயர் என்று அழைப்பார் என எழுதியுள்ளனர். போர்லியோவில் அவர் எவ்வளவு நாள் இருந்தாரெனத் தெரியவில்லை

ஆயின் போர்லியோவில் அவருக்கு மூன்று ஆலயங்கள் 1629, 1680, 1906 என்ற ஆண்டுகளில் எழுப்பப்பட்டன. அவரின் முதல் மறை உரைக்கு இவை தக்க எடுத்துக்காட்டுகள் ரோமாக்னா மாகாணம் முழுவதும் சென்று மறை உரை ஆற்றும் புதுப்பணியை அவருக்கு மேலாளர் அளித்தார் ஏகாந்த நிலையினை விட்டு போதக நிலையைத் தெரிந்து கொண்டார். அன்று லம்பார்ட்டி எமிலாயா, ரிமினி , வெனிஸ், பிரூலி என்ற மாவட்டங்கள் ரோமாக்னா மாநிலத்துடன் இணைந்திருந்தன.

**உலகம் ஒரு தோட்டம். அதில் கனி விளைவிப்பது மிகக் கடினமானது.**

துறவிகள் மனிதரை விட்டகன்ற இடங்களில் உழைத்து நல்வாழ்வு, நற்பெயர் என்ற மணம் தனைப் பெற்று வாடி வீழ்ந்து மடிதல் எவ்வளவு சிறப்பானது? இதனால் தான் கிறிஸ்து “நான் வயலின் மலர்” என்று திருவுளம் பற்றி மகிழ்ந்தார் என **அவர்** தமது புதிய அப்போஸ்தலப் பணி பற்றி எழுதியுள்ளார்.

இட ஒரு பெரும் மறை இயல்மேதை, மறை உரை ஆற்றச் சென்று விட்டார். திரள் திரளாக மக்கள் அவரின் அமுத வாக்கியங்களை கேட்க திரண்டு வந்து, திருந்திய உள்ளத்தோடு திரும்பினர்.

# 7. அறநெறி காட்டிய அருளாளர்

“அண்டவர் மேல் நம்பிக்கை வைப்பவர்கள் புதிய வலிமையைப் பெற்றுக்கொள்வர். கழுகுகளைப் போல் இறக்கைகள் பெற்றுப் பறந்திடுவர். ஓடுவார்கள், ஆனால் களைக்க மாட்டார்கள் நடப்பார்கள், ஆனால் சோர்வடையமாட்டார்கள்” (இசையாஸ் 40.:.31)

**இலத்திரன் திருச்சங்கம்**

அந்தோணியாரின் முதல் மறை உரைக்குப் பின் அவருக்கு பல்வேறு பொறுப்புகள் தரப்பட்டன. துன்மார்க்கம், பதிதம் இவற்றை மக்களிடமிருந்து நீக்க அந்தோணியார் தெரிந்து கொள்ளப்பட்டார். சர்வேசுரன் மீது பக்தியுடையவர். தேவ ஏவல் செய்வதில் பேரார்வம் கொண்டவர். அடக்கமானவர். சாந்த சீலர், கற்பின் கொடுமுடி யாவற்றிற்கும் மேலாய் தேவ ஆசீர் பெற்றவர். எனவே தான் ஆசிரியர் பணிக்கு தகுதியுடையவர் என் மேலாளர்கள் முடிவு செய்தனர்.

அந்தோணியார் வரலாற்றினை எழுதியவர்கள் சம்பவங்கள் நடந்த காலத்தைக் குறிப்பிடவில்லை. புதுமைகளை ஆங்காங்கே தொகுத்து வைத்தனர். 1222-23 ஆண்டுகளில் வட இத்தாலியாவில் உள்ள ரோமாக்னா மாநிலத்தில் மறைத் தொண்டு செய்தார். 1224 முதல் மூன்று ஆண்டுகள் அவர் சேவை பிரான்ஸிற்குக் கிடைத்தது. ஸ்பெயின் நாட்டுக் கரையோரங்களில் அவர் போதித்ததாயும் தெரியவருகின்றது.

1227 முதல் 1230 வருடம் வரை இத்தாலி நாட்டில் உழைத்தார். கடைசி இரு ஆண்டுகள் அவர் பதுவை மாநாகரில் தங்கி வேத போதகஞ் செய்தார். இத்தாலி, பிரான்ஸ், ஸ்பெயின் நாடுகளுக்கு அவரது அரிய சேவை கிட்டியது. மிகவும் பயனடைந்தன. அசிசி அண்ணலைப் பின்பற்றி திறந்த வெளிகளில் மறை உரையாற்றி வந்தார்.

அக்காலத்தில் ஞான வாழ்வில் இல்லற வாசிகளிடையிலும், துறவியர் இடையிலும் தளர்ச்சி காணப்பட்டது. “ஞான ஆசிரியரின் வாழ்க்கை அவர்களது போதகத்திற்கு ஏற்ப அமைய வேண்டும்” என அந்தோணியார் எண்ணி கடின செப-தப வாழ்வின் மூலம், தம்மை அதற்கு முற்றிலும் தகுதியுடையவராக்கினார். பாவத்திலிருந்து மக்களை மீட்பதை தம் குறிக்கோளாகக் கொண்டார். பலருக்கு நல்லுபதேசம் செய்து நல்வழிப்படுத்தினார்.

விசுவாச தளர்ச்சி நிலவிய அக்காலத்தில் அதாவது 1251ல் இலத்தரன் திருச்சங்கம் கூடி, வருடத்திற்கு ஒரு தடவையாகிலும் நல்ல பாவச்கீர்த்தனம்

செய்து நற்கருணை உட்கொள்ள வேண்டும் என அறிவித்தது. “பாவ சங்கீர்த்தனத்தை சர்வேசுரனின் வீடு” என அழைக்கிறோம். ஏனெனில் அது பாவிகளுக்கு பாவமன்னிப்பு அருளி ஊதாரிமகன் தன் தந்தையிடம் ஒப்புரவானதைப் போல் சர்வேசுரன்டன் சமாதானம் செய்து வைக்கிறது.

பாவசங்கீர்த்தனம் “மோட்சத்தின் வாசல்” எனவும் அழைக்கப் படுகின்றது. பரமனின் திருவடிகளை பரத்தில் முத்தமிடச் செய்யும். அது உண்மையிலேயே பரலோகத்தின் வாசலே என அவர் நயம்பட உரைத்துள்ளார். அதனால் அவர் இந்த அருள் சாதனத்தை நிறைவேற்றறுவதில் அதிக அக்கறையும் காட்டினார்.

***மறைநூல் ஆசிரியர்***

ரிமினி, போலோநா நகரங்களின் கடற்கரைகளில் அந்தோணியார் பிரசங்கஞ் செய்து பலரை மனந்திருப்பினார். இவ்வேளை தூய அசிசியார் அந்தோணியார் குருமட மாணவர்களுக்கு இறை இயல் கற்பிக்க வேண்டுமென்று கட்டளையிட்டார். அதனை ஏற்று போலோ நாவிலும் பிரான்ஸ் நாட்டு தூலூஸிலும் மறை இயல் ஆசிரியராக பணியாற்றினார்.

அக்காலத்தில் பல பதித மதங்கள் எழுந்தன. அந்தோணியார் போன்ற பல மேதைகளால்தான் அவர்களுக்குத் தக்க பதில் தர இயலும். ஆகவே அந்தோனியாரைப் பற்றி நன்றிகறிந்த அசிசியார் இளந் துறவிகளுக்கு இவர் மறை இயல் கற்றுத்தர வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். இப் புதிய பணியையும் அவர் மனம் உவந்து ஏற்றார். வேதாகமம், அகஸ்தீனார் சித்தாந்தம், மறை இயல், திருச்சபை மேதைகளின் படிப்பினைகள் யாவற்றையும் திறம்பட எடுத்தோதினார். இந்நூல்களிலுள்ளவைகள் அவருக்கு மனப்பாடம்.

அவ்வளவு நினைவாற்றல் உடையவர். “இவரிடம் கலை பயில்வது பெரும் பேறு” என அவரது மாணவர்கள் மகிழ்ந்தனர்.

# 8. மச்சங்களுக்கு பிரசங்கம்

ரிமினி என்பது ஜெர்மானிய கடற்கரைப் பட்டணம். ஆல்பிஜீனிய பேதகம் வேரூன்றிய இடம் இதுவே. ஜெர்மானிய மன்னர்கள் பாப்பரசர் மீது வெறுப்புடையவர்கள், எனவே இத்தீய கும்பலை வளர்த்தனர். இவர்களின் தலைமை இடம் ரிமினி. அரசின் ஆதரவு இருந்ததால் கத்தோலிக்கர் துன்புறுத்தப்பட்டனர். 1220ம் ஆண்டு வேதங்கள் போதித்த மறை ஆயரை பேதகத்தினர் கொன்று விட்டனர். அந்தோணியார் ரிமினி வர இரு ஆண்டுகளுக்கு முன் இது நிகழ்ந்தது.

பலர் அதன் மாய்கையில் மூழ்கினர். இதனைத் தகர்த்தெறிய வல்லவர் அந்தோணியார்தான் என்று மேலாளர்கள் முடிவு செய்தனர். அதற்கென அவரை அனுப்பி வைத்தனர். அவரது போதனைகளுக்குச் செவிமடுக்க மக்கள் மனம் இடம் தரவில்லை . கடல்ஓரம் சென்றார். மீன்களைப் பார்த்து மறையுரை ஆற்றினார். மீன்கள் தங்கள் தலைகளை நீரின் மேல் நீட்டி அணி அணியாய் நின்று மறையுரையைக் கேட்டன. அவர் சொன்னதாவது:

“என் அருமை மச்சங்களே! நீங்கள் சர்வேசுரனுக்கு நன்றி செலுத்த கடமைபட்டுள்ளீர்கள். உங்களுக்கு நல்லதொரு இடத்தை வாழத் தந்தருளினார். நீங்கள் விரும்பும் இடங்களுக்குச் செல்லலாம். தண்ணீரையும், உப்பையும் பெற்றுள்ளீர்கள். எந்தப் புயலும், சூறாவளியும், கொந்தளிப்பும் உங்களைத் தாக்க முடியாது. அவ்வளவு பாதுகாப்பான இடம்.

நீங்கள் பலுகிப் பெருகிட சர்வேசுரன் திருவுளமானார். நோவாவின் பேழையில் இருந்த மிருகங்களைத் தவிர எல்லா விலங்கு புள்ளினங்க ளையும் அழித்தார். ஆனால் உங்களையோ அப்படியே விட்டு வைத்தார். மக்கள் தவம் செய்யத் தூண்டுமாறு யோனாஸ் தீர்க்கதரிசியை நீங்கள் விழுங்கச் செய்து மூன்றாம் நாள் விடுவித்த பெருமை உங்களுக்கு உண்டு. உங்கள் வாயிலிருந்தே ஆண்டவர் காசு பெற்று தனக்கும் இராயப்பருக்கும் வரி செலுத்தினார்.

பரலோகஞ் செல்லுமுன் நம் மீட்பர் தாம் உயிர்த்ததை அப்போஸ்தலர்களுக்குக் காண்பிக்க உங்களையே உணவாக உண்டார். இது போன்ற பல காரணங்களால் நீங்கள் அவருக்கு ஏனைய பிராணிகளைவிட அதிகமாக நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளீர்கள்.”

(இதனால் தான் மீன்கள் இல்லாத போது அதிக மீன்கள் பிடிபட கடலோரங்களில் அந்தோணியார் சொரூபம் பவனியாக எடுத்துச் செல்லப்படுகிறது)

இதைக்கண்ட பதிதர்கள் அதிசயப்பட்டனர். அவர் பிரசங்கத்தை கேட்டனர். பலர் மனந்திரும்பினர். அவர்களுள் 30 ஆண்டுகளாய் பதிதத்தில் இருந்த போனில்லோ என்பவன் குறிப்பிடத்தக்கவன்.

போனில்லோவின் வேலைக்காரன் தன் எஜமானின் மனந் . திரும்பலைப் பார்த்து வியந்து கானும் மனம் திரும்பினான். நல்ல கிறிஸ்தவனாக பிற்காலத்தில் பிரான்சிஸ்கன் சபையில் சேர்ந்தான். ஆன்ம ஆவல் மிகவுற்று, மறைத்தொண்டு செய்தான் துறவியுமானான். பின் முத்திப் பேறு பெற்ற பட்டம் பெற்றான். இவர்தான் பரோன்றி அருளப்பர்,

# 9. கழுதையின் ஆராதனை

போனில்லோ திவ்விய நற்கருணையில் ஆண்டவர் இல்லை என வாதிட்டவன். கடின மனத்தினன். அந்தோணியார் அவனைத் தெருவில் கண்டார். நற்கருணையில் உண்மையாகவே சர்வேசுரன் இருப்பதை தெளிவுப்படுத்த இருவருக்கும் ஒரு போட்டி ஒப்பந்தம் ஏற்பட்டது.

அதாவது அவன் தன் கழுதைக்கு மூன்று நாட்கள் எந்த உணவும் தரக்கூடாது. நான்காம் நாள் கழுதையை ஆலயத்தின் முன் கொண்டு வரவேண்டும். அந்தோணியார் நற்கருணை நாதரை ஏந்தி வருவார். அவ்வேளையில் அவன் அதற்கு தீனிபோட வேண்டும்.

பசியுற்ற கழுதை உணவை நாடாது நற்கருணை நாதர் முன்னால் மண்டியிட்டால் அவன் மனம் வருந்தி ஆல்பிஜீனிய பேதகத்தை விட்டு விட வேண்டும். அவனும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தான்.

அனைவரிடமும் இது பற்றிச் சொன்னான். வேடிக்கை பார்க்க பெருங் கூட்டம் கூடியது. அந்தோணியார் நற்கருணைப் பேழையைத் தாங்கி வந்தார். அந்த நேரத்தில் மூன்று நாட்கள் பட்டினி கிடந்த கழுதைக்கு, அது விரும்பி உண்ணும் உணவைப் போட்டான் போனில்லோ.

அது உணவை எட்டிக் கூடப் பாராது மண்டியிட்டு ஆண்டவரை வணங்கியது. இவ்வதிசயத்தைப் பார்த்த பலர் மனம் திரும்பினர். பார், “விலங்கு அறிந்த விமலனை பாவி நான் அறியவில்லையே” என அவன் புலம்பி நல்ல கிறிஸ்தவன் ஆனான்.

**ஒளிரும் விளக்கு**

தென் பிரான்ஸ் நாட்டில் ஆல்பிஜீனிய மதம் தலை விரித்துத் தாண்டவமாடியது. தூய சுவாமிநாதர் இதனைத் தகர்த்தெறிய அரும் பாடுபட்டார். அரசினால் இதனை வேரறுக்க முயன்றும் முற்றிலும் முடியவில்லை . இப்பேதகத்தினர் இயேசுவின் தெய்வீகத்தை மறுத்தனர். அருட்சாதனங்கள், நரகம், மோட்சம் என்பனவற்றை மறுத்தனர். அவர்களை மனந்திரும்புவதற்காக அந்தோணியார் கால்நடையாகப் பிரான்ஸ் நாட்டிற்குப் புறப்பட்டார். பார்மா நகரில் உள்ள தம் சபை துறவியர்களையும், வெர்செல்லி நகரில் தம் நண்பர் மாமேதை அகுஸ்தீனார் சபைத் துறவி தாமஸ் காலாசையும் சந்தித்தார். காலாஸின் படத்தில் அந்தோணியாரின் படமும் காணப்பட்டது. இதற்குச் சான்று தனது மரணத்திற்குப் பின் அந்தோணியார் இவருக்குத் தோன்றினார். “எனது கழுதையை பதுவையில் விட்டுவிட்டேன். இப்பொழுது வீடு செல்கிறேன்”

என மொழிந்தார். “அந்தோணியார் ஒளிரும் விளக்கு, இறைப்பற்றால் எரியும் அவர் இதயம் மக்களுக்கு வழிகாட்டி” என காலாஸ் புகழ்ந்தார்.

**மகப்பேறு தருதல்**

வழியில் ஆல்ப்ஸ் மலையை அடுத்த பட்டணத்தில் அனிஸி என்ற சீமாட்டி இவருக்கு உபசரணை செய்தாள். இவள் பக்தி மிக்கவள். அந்தோணியார் மீது பற்றுக் கொண்டு என்றாவது அவரைப் பார்த்து அவரின் ஆசீரைப் பெற வேண்டும் என விரும்பியவள். அவரால் தனது வாழ்வு மலரும் என நம்பியிருந்தாள். சாலையில் யாராவது துறவிகள் சென்றால் அது அந்தோணியாராக இருப்பாரோ என நினைத்து ஓடோடிச் செல்வாள். இவளுக்கு மக்கள் பேறு இல்லை. அவள் ஒருநாள் அந்தோனியாரை சந்தித்து பணிவுடன் உபசரித்து தன் மனக்குறையை எடுத்துரைத்தாள். “இறையருளால் ஒரு மகனை அடைவாள் என்றும், அவன் பிரான்சிசின் சபையில் சேர்ந்து வேதசாட்சியாவான்” என்றும் முன்னுரைத்தார். பிற்காலத்தில் அவள் மகன் பிலிப்பு பாலஸ்தீனாவில் வேதசாட்சியானார்.

***அசீசியார் கேட்ட மறையுரை***

அந்தோணியார் ஆர்லஸ் நகரிலுள்ள கப்பூச்சின் ஆசிரமத்தை அடைந்தார். அது 1224ம் ஆண்டு தூய மிக்கேல் அதிதூதர் திருநாள் காலம். அந்தோணியாரின் நாவன்மையைப் பற்றி கேள்விப் பட்டிருந்த மோனஸ்தோ மட அதிபர், நடக்க இருக்கும் சபைக் கூட்டத்தில் அவர் மறையுரை ஆற்ற வேண்டுமென வேண்டினார். அந்தோணியார் உடன் பட்டு “இயேசு நசரேன் யூதர்களின் ராஜா” என்ற தலைப்பில் அரியதோர் மறைஉரை நிகழ்த்தினார். மேலாளரின் உதவியாளர் கண்களில், தூய பிரான்சிஸ் அசிசியார் தரையிலிருந்து மேலே ஆகாயத்தில் நின்று கதவண்டையில் ஆசீர்வதிப்பது தெரிந்தது. இந்நிகழ்ச்சியைப் பற்றிய படம் அசிசிநகர் பேராலயத்தில் அழகுபட வரையப்பட்டுள்ளது.

# 10. குருமட பேராசிரியர்

“எங்கே நான் இருக்கிறேனோ, அங்கே என் பணியாளனும் இருப்பான்” (அரு.12126)

**இவ்வீட்டிற்குச் சமாதானம்**

ஆர்ல்ஸ் பட்டணத்திலிருந்து நமது புனிதர் மான்பெல்லியார் பட்டணம் அடைந்தார். தமது துறவியர் பிரயாணஞ் செய்யும் போது இறைமகன் இயேசு உரைத்ததைப் போல் நடந்திட வேண்டும் என அசிசியார் உத்தரவிட்டிருந்தார். எனவே எதையும் தம்முடன் எடுத்துச் செல்லாது. “இவ் வீட்டிற்குச் சமாதானம்” எனச் சொல்லி இல்லமொன்றை நாடவேண்டும். அங்கு கிடைப்பதை உண்டு நிறைவு கொள்ள வேண்டும் என்பதே அசிசியாரின் உத்தரவு. தன் துறவியர்களின் நடத்தையை வார்த்தைகளால் அல்லாத ஒரு மறை உரையாக அமைய வேண்டுமெனவே இவ்வாறு பணித்தார். அந்தோணியாரும் இதற்கேற்பச் சென்றார். மான்பெல்லியார், ஆல்பிஜீனிய பதிதரின் மையமாக இருந்தது. இதனால் அந்தோணியார் தனது திருப்பணிகென இவ்விடத்தை தெரிந்து கொண்டு அங்குள்ள மடத்தில் வாழ்ந்து வந்தார்.

**அமைதியான மறை உரை**

ஒரு நாள் உடன் துறவி ஒருவரிடம் “சகோதரரே! நாம் வெளியில் சென்று மறை உரை செய்து வருவோம்” என்றார் அந்தோணியார். இருவரும் புறப்பட்டு நகரின் சந்தடியான வீதிகளைக் கடந்து சந்தையை அடைந்தனர். சந்தையில் ஒரே கும்மாளம் விளையாட்டு, வேடிக்கைகள், கேளிக்கைகள், ஆர்ப்பாட்டங்கள். சந்தையோ அல்லோகலப்பட்டது. குனிந்த தலை நிமிராது இருவரும் சந்தையுட் புகுந்தனர். அந்தோணியார் ஓரிரு நிமிடங்கள் மௌனமாய் நின்றார். பிரசங்கம் எதுவும் செய்யவில்லை . பின்னர் திரும்பலானார்.

சகோதரர்: “தந்தையே! ஒரு பிரசங்கமும் நீங்கள் செய்யவில்லையே! மறை உரை நிகழ்த்த அல்லவா வந்தீர்கள்” எனக் கேட்டார்.

தூயவர்: “நண்பரே! இவ்வளவு சந்தடியான இடத்தில் நாம் மௌனமாய் நின்றோமே! அது தான் உண்மைப் பிரசங்கமாகும்”.

இத்தனை மக்களும் இந்த ஆரவாரச் சூழ்நிலையில் நாம் அமைதியாய் தரையைப் பார்த்தவாறே நின்றதைப் பார்க்காமலா இருந்திருப்பார்கள்? இது அவர்களின் வீண் பொழுதுபோக்கிற்குத் தக்க பாடம் கற்பித்திருக்குமல்லவா?

இதைவிட்டு அமைதியாயிருங்கள் என நாம் சொல்லி மறை உரை ஆற்றினால் என்ன பயன்? நிச்சயமாக அவர்கள் நம்மைப் பற்றி ஏளனமாய் அன்றி நன்முறையில் பேசியிருப்பார்கள். நமது ஆண்டவராம் இயேசுபிரானைப் பற்றியும் பேசியிருப்பார்கள்" என்றார்.

**சங்கீத ஏடு**

மடத்தில் உள்ள துறவிகளுக்கு வேதாகம ஆசிரியராகவும், மறை இயல் விரிவுரையாளராகவும் அவ்வப்போது செயல்பட்டார். சங்கீதங்களை அருமையாக அவர்களுக்கு விளக்கினார்.

இளைஞன் ஒருவன் சபையில் சேர்ந்தான். மனத்திடன் இல்லாத அவனுக்கு. சபை விதிகள் கடினமாய்த் தோன்றியது. அவன் சபையைவிட்டு வெளியேற முடிவு செய்து விட்டான்.

அக்காலத்தில் அச்சு நூல்கள் இல்லை. எனவே சங்கீதங்களை கைப்பட எழுதி, அவற்றின் விளக்கக் குறிப்புகளையும் எழுதி ஒரு புத்தக வடிவில் நம் தூயவர் வைத்திருந்தார். அச்சு இயந்திரம் இல்லாத அக்காலத்தில் கையெழுத்துப் பிரதிகள் தான் இருந்தன. இவற்றை தயாரிப்பது மிகவும் சிரமமான வேலை, இளந்துறவி இப்புத்தகத்தைத் திருடி, ஓடி விட்டதை அறிந்த அந்தோணியார் வேதனைப்பட்டார். தன் ஏடு மீண்டும் கிடைக்க உதவிட சர்வேசுரனை வேண்டினார். விட்டகன்ற துறவி, மீண்டும் நன்மனது பெற வேண்டும் எனவும் மன்றாடினார். இளந்துறவி ஒரு பாலத்தின் மீது செல்லும்போது உருவிய வாளுடன் பசாசு அவர்முன் தோன்றியது. அதன் தோற்றம் வளர்ந்து கொண்டே வந்தது. பயத்தால் நடுங்கி நாக்கு உழறியது இளந்துறவிக்கு,

"சர்வேசுரனின் ஊழியனாகிய அந்தோணியாரிடம் திருடிய ஏட்டை சேர்த்திடு. இல்லாவிட்டால் தேவ கட்டளைப்படி உன்னைக் கொன்று ஆற்றல் எறிந்து விடுவேன்" என சாத்தான் சொன்னது.

விரைந்து மடத்திற்குத் திரும்பி ஓடி அந்தோணியாரிடம் மன்னிப்புக் கேட்டு, திருடிய கையெழுத்துப் பிரதியை அவரிடம் கொடுத்தார்: புனிதர் இளந் துறவியை சர்வேசுரனிடம் மன்னிப்புக் கேட்குமாறு அன்புடன் பணித்தார். மேலாளரும் இளந்துறவியை மன்னித்து திரும்பவும் சபையில் ஏற்றுக் கொண்டார். அதன் பின் அவர் நல்ல துறவியாக வாழ்ந்து தன் குருவென அந்தோனியாரை ஏற்று சோதனைகளை வென்று, மன அமைதியடைந்தார்.

**துறவிகளுக்கு அறிவுரை**

விசுவாசத்தில் தத்தளித்த இறை மக்களுக்கு விசுவாசத்தை ஊட்டினார். பதிதரை நல்வழிப்படுத்தும் பணியில் சக துறவிகளை ஈடுபடுத்தினார். அதற்கேற்ற பயிற்சியும் அளித்தார். மக்களுக்கு அவர் அளித்த மறை உரை தெளிவாக அமைந்திருந்தது.

ஒரு மறை உரையில் புனிதர் "கிறிஸ்து தந்தையிடமிருந்து, விதைகளை விதைப்பதற்கும், திருச்சபையை நிறுவி அவற்றை அதில் சேர்த்து வைப்பதற்காகவுமே உலகிற்கு வந்தார். திருச்சபை இதனை அழியாமல் என்றும் பாதுகாக்கும். இயேசு மூன்று விதமான விதைகளை விதைத்தார். அவை:

1. அவரது தூய வாழ்வு 2 இறை அரசின் நற்செய்திகள் 3 அற்புதங்கள்

எவ்வளவு பொருத்தமாக சர்வேசுரனின் வாக்கு வித்திற்கு ஒப்பிடப்பட்டுள்ளது. வித்தைப் போன்று மறையுரையும் மண்ணில் முளைத்து கனியை தருகிறது.

"முதலில் இலை - பின் மணி - பின் தானியம் பாவியின் மனதில் விதைக்கப்படும் இறை வார்த்தையான விதை கொணரும் இலை அவன் பச்சாத்தாபம் வரும் கதிர் பாவ சங்கீர்த்தனம் பழுத்த கதிர் அவன் பெறும் அமைதி" என சுட்டிக்காட்டியுள்ளார்:

***அன்னை ஆரோஹணம் அறிவிக்கப்படல்***

தேவதாயின் பரலோக ஆரோபணம் விசுவாச சத்தியமாக அன்று பிரகடனஞ் செய்யப்படவில்லை . ஆயினும் பலர் அதை விசுவசித்து விழாக் கொண்டாடினர். பரலோக ஆரோபணத் திருநாளன்று இது பற்றி அந்தோணியாரக்கு சந்தேகம் ஏற்பட்டது. சிந்தனையில் ஆழ்ந்தார். மந்திர மாலை வேளையில் தேவ அன்னை அவருக்கு மகிமையுடன் தோன்றி, தான் பரத்திற்கு ஆன்மாவுடனும், உடலுடனும் எடுத்துச் செல்லப்பட்டது உண்மை என்றாள். "மந்திர மாலைக்கு அன்று வராதது ஏன்? என்று மேலாளர் கேட்ட போது நடந்ததைக் கூறினார்.

# 11. பிரான்சீஸின் தோழன்

“அவர்கள் குரலொலி மண்ணுலகெங்கும் பரவிற்று. அவர்கள் வார்த்தை உலகின் எல்லைகள் வரை எட்டிற்று” (உரோ 10.:.18)

நற்கருணை நாதர் மீது பக்தி உள்ள நாடு பிரான்ஸ், இங்கு அந்தோணியார் வேதபோதகம் செய்யும் காலம் நெருங்கி வந்தது. ரிமினியில் பணியாற்றிய அவர் பொலோனா துறவியரின் போதகராக அனுப்பப்பட்டார். ஒரு சில மாதங்களே இங்கு தங்கிய பின் அவர் லாங்கேதோத் பட்டணம் செல்ல வேண்டியதாயிற்று. இது ஆல்பிஜீனியர்கள் பெருவாரியாக வாழ்ந்த இடம். இங்கு அசிசியார் சபைத் துறவிகளை, அனுப்ப முடிவு செய்யப்பட்டது.

3வது ஓனோரியஸ் பிரான்ஸ் நாட்டு லூயிஸ்க்கு ஒரு கடிதம் எழுதினார். “பதிதத்தை அடக்குவதற்கு நாம் இது நாள்வரை மேற்கொண்ட முயற்சிகள் விழலுக்கு இறைத்த நீராயின. பதிதம் வளருவதை துயருடன் காண்கிறோம். இது ஒரு வேத கலாபனையை உண்டு பண்ணலாம்.

எனவே திருமறையின் மகனும் பரம்பரை கத்தோலிக்க மரபில் தோன்றிய அரசனுமான உம்மை ஆண்டவர் இயேசுநாதர் பெயரால் கெஞ்சிக் கேட்டுக் கொள்வதாவது: கிறிஸ்துவைப் பற்றியுள்ள செயல்களில் கவனமாய் இருக்க வேண்டும். அத்துடன் உரோமாபுரி திருச்சபை உங்களுக்கு ஆன்மீக, உலகியல் உதவிகள் செய்யும் என்பதை அறிவீர்” என அதில் குறிப்பிட்டு இருந்தார். தங்களிடமுள்ள மிகத் திறமையும் தகுதியுமுடைய துறவிகளை பிரான்ஸ் நாடு அனுப்ப வேண்டுமெனத் துறவற மடங்களுக்கும் பலகலைக்கழகங்களுக்கும் வேண்டுகோள் விடுத்தார்.

பாப்பிறையின் ஆணைப்படி அந்தோணியார் பிரானஸுக்கு அனுப்பப்பட்டார். முதலில் மோன்பெல்லியர் நகரில் சென்று கத்தோலிக்கரை விசுவாசத்தில் திடப்படுத்தினார். பதிதர்களை பேச வொட்டாது செய்தார். பதிதம் மிகவும் பீடித்திருந்த தூலூஸ்நகரத்திற்கு அவர் செல்ல ஆணை பிறந்தது. தயங்காது சென்றார். அந்தோனியாரை துறவிகளும் மறை ஆயரும் மிக்க மகிழ்வுடன் எதிர் கொண்டழைத்து வரவேற்றனர்.

குருமட மாணவர்களுக்கு இப்பேதகங்களை நீக்கிட தக்க முறையில் பயிற்சி தர வேண்டியது அந்தோணியாரின் தலையாய கடமையாயிற்று. மோன்பெல்லியர் என்ற இடத்தில் சுவாமிநாதர் சபையினரும் அசிசியார் சபையினரும் இரு கல்லூரிகள் அமைத்தனர். பேதகத்தை நசுக்குவதற்கென்றே இவை தொடங்கப்பட்டன. இங்கு கற்பிக்குமாறு அந்தோணியாரக்கு அழைப்பு வந்தது. அதனை ஏற்றார். அக்காலத்தில் வாழ்ந்த “தோமஸ்கலோ” என்ற

மடாதிபதி அந்தோணியாரின் தூய வாழ்வையும், நுண்ணறிவையும் கண்டு வியந்தார். அத்துடன் "அந்தோணியார் வேதக் காரியங்களை நன்றாக அறிந்தவர் புனித ஸ்நாபக அருளப்பரைப் போல் இவர் சுடர் ஒளி வீசினார்" என எழுதி வைத்துள்ளார். பேதகத்தை அவர் அஞ்சா நெஞ்சினராய் எந்த அளவிற்கு அடக்கி, ஒடுக்கி தவ வாழ்வு நடத்தினார் என்பதை இது விளக்கும். தனது சொல்லாலும் செயலாலும் கடமையைத் தவறாமல் திருப்பணி செய்ததாலும் பல பேதகத்தினரை நல்வழிப்படுத்தினார்.

1225ல் அவர் புவான்வெலே நகர் மடத்தின் தலைவரானார். இங்கும் அவருக்கு உற்சாகமான வரவேற்பு. இந்நகர் மலைகளால் சூழப்பட்டது. எனவே பதிதம் இங்கு தலைகாட்டவில்லை . எனினும் பேதகத் தப்பறைகளையும் அதனால் வரும் கேடுகளையும் மக்களுக்கு எடுத்துரைத்து எச்சரித்தார். இதற்குப்பின் அவர் பெரி, லிமூ மாவட்டங்களின் ஊர்கள் அனைத்திலும் போதித்தார். கால் நடையாகப் பசி, பட்டினியைப் பொருட்படுத்தாது போதித்தார்.

பூர்ஜ் நகரம் அவர் சேவையால் சிறப்பாகப் பயனுற்றது. இதைத் தொடர்ந்து அவர் புரோவான்ஸ் மாகாணத்திலுள்ள ஆர்ஸ்நகர் சென்று லிமூசின் மாகாண மடத்தின் அதிபரானார். பிரான்ஸ் நாட்டில் இம்மாநிலத்தையே அவர் அதிகம் நேசித்தார். இங்குள்ள மக்கள் நல்ல கத்தோலிக்கர் அதனால் பதிதம் இங்கு ஊடுருவவில்லை , மக்களுடன் நெருங்கிப் பழகினார். அவர்களின் சுக துக்கங்களில் பங்கு கொண்டு தத்தளிப்போருக்கு ஊன்று கோலாயிருந்தார். அரிய பிரசங்கங்கள் செய்தும், செப தப வலிமையாலும் பசாசுகளை ஓட்டினார்.

பின்னர் லிமேஜ் பட்டணம் சென்றார். மக்கள் அவரின் புகழை அறிவர். அவர் ஆடையினைத் தொட்டுக் குணமடைய வந்த பிணியாளர்கள் பலர். அவர் ஆசீரைப் பெறவும், தெய்வீக ஒளி வீசும் முகத்தினைக் காணவும் வந்தவர் ஆயிரமாயிரமாவர்.

அவரிடம் தீர்க்கதரிசன வரமிருந்தது. அவரது பிரசங்கத்தை விருப்புடன் கேட்டனர். ஆசீர்வாதப்பர் சபையினரின் பொறுப்பிலிருந்த கல்லறைத் தோட்டத்தில் உத்தரிக்கும் ஆன்மாக்கள் திருநாளன்று அவர் செய்த மறை உரை மக்கள் மனதில் ஆழமாய்ப் பதிந்தது. இந்நகரில் இடையிடையே தனிமையான ஒரு இடம் சென்று தன் கையாலேயே வேயப்பட்ட குடிசையில் சர்வேசுரன்டன் சல்லாபித்தார்.

1226ஆம் ஆண்டு அக்டோபர் 3ம் நாள் அசிசி பிரான்சீஸ் சர்வேசுரன் திருவடி சேர்ந்தார். இச்செய்தி அந்தோணியாரக்கு மிகுந்த துயரத்தைத் தந்தது. மற்றொரு நண்பருடன் இத்தாலி புறப்பட்டார்.

மார்செயில்ஸ் நகரில் அசிசியார் சபை துறவறமடம் இருந்தது. இத் துறைமுகப் பட்டணத்திலிருந்து கப்பலேறினார். தான் தொண்டு செய்த பிரான்ஸ் நாட்டை

விட்டுச் செல்வது அவருக்குக் கடினமாக இருந்திருக்கலாம். அவர் காலத்தில் வாழ்ந்த கீர்த்தி பெற்ற ஜூலியன். என்ற மறை இயல் மேதை அவரைப் பற்றி இவ்வாறு எழுதினார்.

(1" "அந்தோணியார் துன்பம் என்ற பாத்திரத்தை சுவையுடன் பருகினார். எதற்கும் பின் நின்றவரல்லர். எந்தத் தீயவனும் அவருக்கு அச்சத்தை விளைவிக்கவில்லை . அவனால் தனக்கு மரணம் நேரும் என எண்ணி மறைவிடம் தேடியவரல்ல. மன்னர்களின் கொடுமையான செயல்களையும், விமர்சிக்கும் உரை கல்லாக இருந்தார்"

அவர்கள் புறப்பட்டுப் போய் எங்கும் தூதுரைத்தனர். ஆண்டவரும் அவர்களோடு செயல் புரிந்து உடன் நிகழ்ந்த அறிகுறிகளால் தேவ வார்த்தையை உறுதிப்படுத்தினார்." (மாற்கு 16:20)

இந்த அருள் வாக்கு அந்தோணியார் வாழ்க்கையில் முற்றிலும் நிறைவேறியது.

# 12. தப்பறைகளின் சம்மட்டி

“சென்று வா ஆண்டவர் உன்னோடு இருப்பார்” என்று சவுல் தாவீதுக்குச் சொன்னார். (1சாமு.17.'.37).

**தப்பறை நீக்குதல்**

காத்தாரி என்ற பெயரில் ஆல்பிஜீனிய பதிதர் வாழ்ந்தனர். மனிக்கேஸிய பதிதர் தங்களை “ சுத்தமானவர்கள்” எனக்கருதினர். இதுதான் காத்தாரி என்ற பதத்தின் பொருள். தூலூஸ் மண்டத்திலுள்ள ஆல்பி நகரில் இவர்கள் பெருவாரியாக வாழ்ந்ததால், ஆல்பிஜீனியர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

இரு கடவுள் உண்டு என்பது இவர்கள் போதனை. இவர்களின் கொட்டத்தை அடக்கி, திருச்சபையின் பெருமையினை நிலைநாட்ட அந்தோணியார் தூலூஸ் பட்டணம் வந்தார். விவிலியத்தில் அவருக்கு இருந்த அபார ஞானமும், வேத அறிவும் நாவன்மையும், பதிதர்களின் வாய்களை அடைத்தன. அவருடன் வாதிட எவருமே துணியவில்லை. திருச்சபையின் பெருமையினை எடுத்துரைத்தார். திவ்விய நற்கருணை பக்தியை விளக்கினார். பலர் தப்பறையை நீக்கி திருமறைக்குத் திரும்பினர்.

**லுப்புயி மடத்து மேலாளர்**

பிரான்ஸின் புனித நகரம் என்று அழைக்கப்பட்ட லுப்புயி என்ற இடத்தின், மடத்தின் மேலாளராக நமது தூயவர் நியமிக்கப்பட்டார். இத்தலம் தூலூஸ் நகரின் வட கிழக்கில் சுமார் 175 மைகளுக்கு அப்பால் இருந்தது. இங்குள்ள “கறுப்பு மாதா” ஆலயம் பெயர் பெற்றது. பல திருப்பயணிகள் இங்கு வந்து கூடுவதுண்டு. மலை மேலமைந்த இவ்வாலயத்தை அடைய 265 படிகள் ஏற வேண்டும். இங்கு எவ்வித பேதகமும் இல்லை. பதிதர்களும் இல்லை. நல்ல கத்தோலிக்கர்களே இருந்தனர். பேதகத்தின் சம்மட்டி என்றழைக்கப்பட்ட அந்தோணியார், பதிதர் பெருவாரியாக வாழ்ந்த ஆல்பி நகரில் சமாதான ஞான வாழ்வு தரும் அருளாளராய் இருந்தார்.

**போர்ஜே மாநாடு**

மத்திய பிரான்சிலுள்ள பெரி என்ற மண்டலத்தின் தலைநகரான போர்ஜே பட்டணத்திற்கு அந்தோணியார் 1225ல் சென்றார். பிரான்ஸின் முதல் பேராயர் இங்கு தான் இருந்தார். ஆண்டகை அவர்கள் இவ்வாண்டு நவம்பர் திங்கள் 13ம் நாள் ஒரு மாநாட்டினைக் கூட்டினார். பேதகத்தை தகர்த்தெறிவது எப்படி? சிதறிய மந்தையை ஒருங்கிணைத்து ஆன்மீக மறுமலர்ச்சி ஏற்படுத்துவது

எவ்வாறு? என்ற பொருட்கள் பற்றி ஆய்வு நடத்துவது எனவும் தீர்மானிக்கப்பட்டது. இதை மிக முக்கியமானதாய்க் கருதிய பாப்பிறையும் தனது பிரதிநிதி ஒருவரை அனுப்பி வைத்தார். பேதகத்தின் சம்மட்டி என அழைக்கப்பட்ட அந்தோனி யாரை தனது ஆலோசகர்களில் ஒருவராக ஆயர் தெரிந்து கொண்டார். மாநாட்டில் தக்கதோர் சொற்பொழிவாற்றவும் அவரை அழைத்தார் இந்த ஆயர். பாப்பரசர் 3வது ஒனோரியஸ், மன்னர் 9வது லூயிஸ் என்பவரின் மதிப்பைப் பெற்றவர், மறைஉரை ஆற்றும் சமயம். அந்தோணியார் ஆயரை நோக்கி “ஓ! கிரீடம் அணிந்துள்ளவரே! உமக்கு நான் சொல்ல வேண்டிவை சில உண்டு” என வேத விளக்கத்துடன் தவறுகளைச் சுட்டிக் காட்டினார். இத்தகைய கவனமற்ற வாழ்க்கை நடத்துபவர்கள் பேதகத்தை எப்படி ஓட்டுவர்? என வினவினார். ஆயர் கண்ணீ ர் வடித்தார்.

மறையுரைக்குப் பின் தூயவரை தன் அறைக்கு அழைத்துச் சென்று, தன் இதயக் கதவைத் திறந்து தவறுகளை அறிக்கையிட்டார். பேராயர். இதன் பின் ஆன்ம மறுமலர்ச்சி காண்பதில் ஆவர்வமிக்க ஆயராக விளங்கினார். தூயவருக்குப் பணியும் அளவு தாழ்ச்சி அவரிடம் இருந்தது.

பெரும் பதவி வகிப்பவர் என்று முகத்தாட்சண்யம் பாராத அஞ்சாத நெஞ்சம் உடைய அந்தோணியார், ஒரு தடவை இறை அடியார்களைப் பற்றி கூறியதாவது:

“ஜெருசலேமின் சுவர்களின் காவலாளராக சர்வேசுரன் தன் குருக்களை அமர்த்தியுள்ளார். தங்கள் திருப்பணியில் அவர்கள் ஊக்கம் குன்றி இருப்பதால், அவர்களின் விசுவாசிகள் சாத்தானின் தந்திரத்தில் வீழ்கின்றனர். தன் வாழ்வினால், தன் மக்களுக்கு நல்வழி காட்டும் ஆயர் பாக்கியவான்“.

“நெறிகெட்ட குருக்களாலும், ஆயர்களாலும் தந்தையை தூற்றும் - தாயை அவமதிக்கும் ஒரு கும்பல் தோன்றுகின்றது. அவர்களால் சர்வேசுரன் தூற்றப்பட நேர்வதால் இவர்கள் பரம தந்தையை தூற்றுகிறவர்கள் ஆகின்றனர். தங்கள் தாயான திருச் சபையை இவர்கள் மகிமைப்படுத்துவதில்லை தங்கள் போதனையால், வாழ்வால் விசுவாசத்தை திருச்சபையில் நிலைநிறுத்துவதற்கு பதிலாக அதனை அழித்து விடுகின்றனர்”.

# 13. பாலன் தூயவரிடம் தவழ்தல்

அந்தோணியாரின் நண்பர்களில் ஒருவர் டீஸோ, அவர் புதருக்கும் அவ்வப்போது பல உதவிகள் செய்வதுண்டு. ஒரு நாள் அவர் அந்தோனி யாரை தனது மாளிகைக்கு வருமாறு அன்புடன் அழைத்தார். புனிதரும் சென்றார்.

இரவில் அவர் இருந்த அறையிலிருந்து பேரொலி கிளம்புவதைக் கண்ட டீஸோ, காரணம் என்ன வென்றறிய ஆசைப்பட்டு, சாவித் துவாரத்தின் வழியாய் உற்று நோக்கினார். அறையினுள் இருந்த மேசையின் மேல் விரிக்கப்பட்ட வேதாகமம் இருந்தது. அதன் மீது சுடர் ஒளி வீசும் தேவபாலன் நிற்பதைக் கண்டார். பாலனின் சிறு விரல்கள் அந்தோனியாரை அரவணைத்திருந்தன. அவரும் பாலனை தழுவிப் பேரானந்த நிலையிலிருந்தார்.

டீஸோ மோட்சத்தை தன் வீட்டிலேயே கண்டது போல் உணர்ந்தான்.அவன் இதயம் அக்களிப்பால் துள்ளியது. தேவபாலன் தன் விரலால் கதவுப் பக்கம் சுட்டிக் காட்டினார். தான் பார்ப்பதை அவருக்கு உணர்த்தவே அவ்வாறு செய்தார் என அறிவித்தார். விரைவில் மாட்சிமிகும் காட்சி மறைந்தது.

அந்தோணியார் அறையிலிருந்து வெளியே வந்து நண்பனைத் தழுவி "நான் உயிருடன் இருப்பது வரை எவருக்கும் சொல்லக்கூடாது" என அவரை வேண்டிக் கொண்டார். அவரும் அவர் இறந்த பின்னரே இந்த அற்புதத்தைப் பற்றி வெளியிட்டார்.

அந்தோணியாரக்குத் தொண்டு செய்ததால் அல்லவா தனக்கு அவ்வரிய காட்சி கிடைத்தது என நினைத்து அவர் மீது மேலும் அதிக அன்பும், பற்றுதலும் கொண்டு நல்வாழ்வு நடத்தினார்.

**லிமேஜ் நகர மண்டல மேலாளர்**

1225ம் ஆண்டு முதல் 1227 இஸ்பிரித்து சாந்துவுயானவரின் திருநாள் வரை லிமேஜ் பட்டணம் அவரது திருத்தொண்டால் பொலிவுற்றது. இரு பெரும் மாளிகைகள் இங்கு இருந்தன. அவை இரண்டையும் அடுத்து இரு பேராலயங்கள் இருந்தன. தூய இராயப்பரால் அனுப்பப் பட்ட இயேசுபிரானின் 72 சீடரில் ஒருவரான தூய மார்த்தாள் ஆலயம் இதிலொன்று இன்னொன்று தூய எத்தின் ஆலயம். பிரான்சிஸ்கன் துறவிகள் 1223ல் இப்பட்டணம் வந்தனர். இவர்கள் தூய மார்த்தாளின் ஆலயப் பொறுப்பினை வகித்த ஆசீர்வாதப்பர் சபையினர் அளித்த வீடொன்றில் வாழ்ந்தனர். அந்தோணியார் அப்போது மண்டல மேலாளராக நியமனம் பெற்றிருந்தார். இங்கு தம் உடன் துறவிகளுடன் வாழ்ந்து பல கோவில்களுக்கு சென்று திருவுரையும் ஆற்றினார்.

# 14. பெரிய வியாழன் மறையுரை

பெரிய வியாழனன்று தூய இராயப்பர் தேவாலயத்தில் புனிதர் ஆற்றிய பிரசங்கத்தின் போது கூறியதாவது:பராக "அவரைத் தகுதியாய் உட்கொள்பவர் இருவித நற்பேற்றினை அடைவர். சோதனைகள் குறைதலும், பக்தி வளர்தலுமே அவை.

கசப்பானதை இனிப்பானதாய் மாற்றி நமது இதய பக்திக்கு உணவளிக்கின்றார். தேவசிநேகம், பச்சாத்தாபம் என்ற திருமண ஆடையின்றி பந்தியிலமரும் தகுதி இல்லாதவர் சாபத்திற்குத் தன்னை கையளிக்கின்றனர்".

பல்லாயிரக்கணக்கான மக்கள் அவர் பிரசங்கத்தைக் கேட்க கூடலாயினர். ஆலயத்தில் இடமில்லாது போயிற்று. இதனால் திறந்த வெளிகளில் அவர் சொற்பொழிவு ஆற்ற வேண்டியதாயிற்று.

**தத்தளித்த துறவி திடம் பெறுதல்**

அவரின் அரிய போதனைகளைக் கேட்ட பீற்றர் என்ற இளைஞன், சபையின் திருவுடைகளை அந்தோணியாரிடமிருந்து பெற்றான்.

சோதனை வந்து அவனை அலைக்கழித்த போது திருவுடைகளை அணிய விருப்பம் இன்றித் தத்தளித்தான்.

அந்தோணியார் அவனைத் தம் அறைக்கு அழைத்துச் சென்று அவனது வாயைத் திறந்து "பரிசுத்த ஆவியைப் பெறுவாய்" என்றார். சோதனை நீங்கி, உண்மையான துறவியாக வாழ்ந்தான்.

ஞான வாழ்வில் நிலைத்திட நமக்கு இஸ்பிரித்து சாந்துவின் அருள் தேவை. இதை இன்று நாம் உணர்கின்றோமா?

அவரின்றி இறைவாக்கு இல்லை. திருச்சபை இல்லை. வழி நடத்துதல் இல்லை . பாதுகாப்பில்லை. அவர் தரித்திரத்தின தந்தை . உத்தம ஆறுதலானவர். வணங்காததை வணங்கப்பண்ணுபவர். தவறினதைச் செவ்வனே நடத்துபவர்.

ஞானம், புத்தி, விமரிசை, அறிவு, திடம், பக்தி, தெய்வபயம் என்ற நற்கொடைகளைத் தருபவர். நன்மரணத்தையும், விண்ணுலகையும் அருள்பவர். ஆனால் இன்று நம்மால் அவர் மறக்கப்பட்டுள்ளார். இது மாபெரும் தவறு.

அர்ச். அந்தோணியார் பரிசுத்த ஆவியானவரைப் பற்றி பின்வருமாறு எழுதியுள்ளார்:

“இஸ்பிரித்து சாந்துவுயானவர் ஒரு ஆன்மாவின் மணவாளனாகும்போது விண்ணுலக வன்மையால் அதனை உடுத்துகின்றார். இறுதிவரை நிலைநிற்கும் ஆற்றலையும், பலவீனருக்கு பலத்தையும், துன்பத்தில் ஆறுதலையும் தருகின்றார். இதனை மனதிற் கொண்டு அவரை நம்புவோம். நலன்களால் நிரப்பப்படுவோம்.

# 15. மூன்று வித காலை மாலை

“மூன்று வித காலை-மாலை உள்ளன. ஒவ்வொன்றிலும் அழுகையும், அகமகிழ்வும் உண்டு. ஆதாம் ஏதேன் தோட்டத்தை விட்டு துரத்தப்பட்டு, நெற்றிவேர்வை நிலத்தில் சிந்தி உழைப்பாய்” எனக் கூறப்பட்டுள்ளது. அதனால் வந்த அழுகை முதல் மாலையாகும்.

“உங்களுக்கு நற்செய்தி கொண்டு வந்துள்ளேன்” என வான தூதரால் அறிவிக்கப்பட்ட அன்று இயேசு பிறந்தது மிக அக்களிப்பான முதல் காலை.

“எருசலேம் குமாரத்திகளே உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக் காகவும் அழுங்கள்” என்ற இயேசுநாதர், மரணமடைந்தது இரண்டாவது அழுகையின் மாலை.

அருளப்பர் கூறுவது போல் உயிர்த்த இயேசுவை அப்போஸ்தலர் கண்டு களித்தது மகிழ்வான இரண்டாவது காலை..

சாராள் இறந்ததற்கு ஆபிரகாம் துக்கப்பட்டார். அதைப்போல ஒவ்வொருவரும் இறப்பது அழுகையின் மூன்றாவது மாலை.

இசையாஸ் தீர்க்கதரிசி “நித்திய மகிழ்வு அவர்கள் தலையின் மேலிருக்கும்” என்றவாறு தூயவர்கள் அனைவரும் உயிர்த்தெழுதல் , மகிழ்வான மூன்றாவது காலை என இவ்வமயம் அழகுற எடுத்துரைத் துள்ளார்.

**துறவியின் சோதனையை நீக்குதல்**

இதற்கடுத்த தினம் துறவியர்களுக்கு ஆற்றிய மறை உரையில் மாடப்புறாவின் சிறகுகளை எனக்கு அளிப்பவர்கள் யார்? நான் பறந்து சென்று இளைப்பாறுவேன்” என்ற தலைப்புடன் உலகம் நிலையாமை யைச் சுட்டிக் காட்டினார். அயராத உழைப்பு, ஏனைய மடங்களில் ஆய்வு நடத்தி துறவிகளுக்கு ஆர்வமூட்ட பல பயணங்கள் என்பனவற்றால் மிகச் சோர்வுற்றார் தூயவர்.

லிமேஜ் மறைமாவட்டத்தில் உள்ள சோலினாக் பட்டணத்தில் அவர் பிணியுற்ற போது ஆசீர்வாதப்பர் சபைத் துறவிகள் தம் மடத்திற்கு அந்தோனியாரை அழைத்துச் சென்றனர்.

பிணி நீங்க தக்க பணிவிடை செய்த இச்சபைத் துறவி ஒரு பெரும் சோதனையால் பீடிக்கப்பட்டிருந்தார். உபவாசம். செபம் உடல் வாதனைகள் செய்தும் சோதனைகள் நீங்கவில்லை.

பழைய ஏற்பாட்டு சூசன்னாள், தன் உயிரை விட கற்பினை மேலென நினைத்தாள்.

அந்தோணியாரின் சாந்த வாழ்க்கை, தூய எளிய போக்கு இத்துறவியைக் கவர்ந்தது. தனது சோதனையை அந்தோணியாரிடம் சொல்லி நல்லதோர் பாவசங்கீர்த்தனம் செய்தார். தனது திருவுடையை அவருக்கு அணிவித்தார். உடனே சோதனையும் அவரை விட்டகன்றது. அதன் பின் எந்த சோதனையும் அவருக்கு ஏற்படவில்லை . அவர் நம் புனிதரின் துயர வேளையில் அவருக்கு உதவி செய்ததால் இம் மேலான நிலையினை அடைந்தார்.

**சாத்தானின் தோல்வி**

பதிதர் பலரை மெய்மறையில் சேர்த்தவர் நம் தூயவர் மட்டுமல்ல பல பாவிகளை மனம் திருப்பியவர். மறையுரைச் சிங்கம். எனவே சாத்தான் இவர் மீது வஞ்சினங் கொண்டு தொலைத்திடத் திட்டமிட்டது. அதன் திட்டத்தை வெட்டவெளிச்சமாக்கினார் சர்வேசுரன்.

ஒரு நாள் அவர் மறையுரை ஆற்றும்போது மக்களை நோக்கி "இப்பிரசங்க மேடையைச் சாத்தான் திடீரென்று இடித்து வீழ்த்துவான், பயப்படாதீர்கள். ஒரு ஆபத்தும் வராது ஆண்டவர் காப்பார்"" என்றார். அவர் சொல்லி முடித்ததும் மேடை பலத்த ஓசையோடு கீழே விழுந்தது. ஒருவருக்கும் ஒரு தீங்கும் ஏற்படவில்லை .

# 16. பிரான்சீஸ் சபை மேலாளர்

“ஆண்டவரே ஒரு வார்த்தை சொல்லுகிறேன், கேளும், அடியேன் உம் முன்னிலையில் அருள் அடைந்தேனே: (ஆதி 19419)

**இத்தாலி பயணம்**

வட இத்தாலி நாட்டு பிரான்சீஸ் சபையின் மேலாளராக அந்தோணியார் 1227ஆம் ஆண்டு நியமனம் பெற்று இத்தாலிக்குப் பயணமானார். அவரது நாவன்மையைப் பற்றி இத்தாலி நாடு நன்கு அறிந்திருந்ததால், அவர் வருகையை மிக ஆவலுடன் எதிர்பார்த்தனர். இவருக்குப் பக்கபலமாக லூக் பெல்லூடி என்ற துறவியும் இருந்தார். இவரும் சிறந்த மறையுரையாளர், செல்வந்தர். செல்வத்தை விட்டு துறவியானவர், அத்துடன் அந்தோணியாரடன் உழைத்தவர். அவர் கடைசி வேளையில் அவருடனிருந்து உதவி செய்தவர்.

**பாப்பிறையின் முன் அந்தோணியார்**

அந்தோணியார் 1228ல் உரோமாபுரி சென்று பாப்பரசர் 9வது கிரகோரியாரைச் சந்தித்தார். இவர் அசிசி பிரான்சிஸின் நண்பர். அந்தோணியாரின் புகழை அறிந்தவர். அதனால் தன் முன்னிலையிலும், கர்தினால்கள், ஆயர்கள், குருக்கள் திருப்பயணிகள் முன்னிலையிலும் ஒரு பிரசங்கம் செய்ய வேண்டுமென அந்தோனியாரைக் கேட்டுக் கொண்டார்.

அந்தோணியாரம் பணிந்து பாப்பரசரது ஆசீருடன் அற்புத பிரசங்கம் நிகழ்த்தலாயினார். பாப்பிறை உளம் பூரித்து “வாக்குத்தத் தத்தின் பேழை” என்ற பட்டத்தை அவருக்கு அளித்தார். இவரால் திருமறை சுடர்விடும் என எண்ணி, இத்தகையவரை அளித்தமைக்கு சர்வேசுரனுக்கு நன்றி செலுத்தினார்.

**பல்வேறு மொழிகளில் அந்தோணியார்**

பெந்தகோஸ்தே விழாவின் போது நடைபெற்ற அற்புதம் அன்றும் நிகழ்ந்தது. அந்தோணியார் உரை நிகழ்த்திய போது குழுமி இருந்த அனைவரும் தத்தம் மொழிகளில் அவரது மறை உரையைக் கேட்டனர். வேதாகமத்தின் எடுத்துக் காட்டுகள் தங்கு தடையின்றி அவர் வாயிலிருந்து மழையைப் போல் பொழியலாயின.

புரிசுத்த பாப்பரசர் மகிழ்ந்து “வேதாகமத்தின் கருவூலம் நீர்” என்று பாராட்டினார். அவர் பல மொழிகள் பேசியதைப் பற்றி எங்கும் எல்லோரும் பேசிக் கொண்டனர்.

அவரோ, “எவன் இஸ்பிரித்து சாந்துவுயால் நிரப்பப்படுவானோ அவன் பல மொழிகளில் பேசுவான். தாழ்மை. ஏழ்மை, பொறுமை, கீழ்ப்படிதல் என்பவைகளை இறை இயேசுவிற்கு அளித்து, நாம் பிறருடன் பேசும்பொழுது நாம் சாட்சிகளாகும் பொருட்டு இவ்வரம் அளிக்கப்படும். நமது வேலை பயனுள்ளதாயிருந்தால் தான் பேச்சிற்குப் பொருளுண்டு. உங்கள் வார்த்தைகள் மறைந்து செயல்கள் வெளியாகட்டும் என உங்களுக்கு அறிவுரை கூறுகிறேன். நமது வாழ்க்கை சொற்களால் மிகுந்து உள்ளது. செயல்களால் காலியாக உள்ளது. வெறும் இலையுடன் பழமில்லாது இருந்த அத்தி மரத்தை சபித்த அவரின் சாபத்தை நாம் நம்மேல் வரச்செய்கிறோம்” என்றார். பின் அசிசி சென்றார். அங்கு புரிசுத்த பாப்பரசர் பிரான்சிஸின் நினைவு அவரை வாட்டியது.

**பதுவை வருதல்**

1229ஆம் ஆண்டளவில் அந்தோணியார் பதுவை மாநகரம் வந்தார். பாச்சிகிலோன் நதியின் கரையில் பதுவை இருந்தது. கல்வியில் சிறந்த அப்பட்டணத்தில் உலகப் புகழ்பெற்ற பல்கலைக்கழகம் இருந்தது. இப்பல்கலைக்கழகம் 1222ல் அமைக்கப்பட்டது. மறை ஆயர் ஒருவரும் இங்கு வாழ்ந்து வந்தார். கிறிஸ்தவ வாழ்வு மிகத் தாழ்வான நிலையிலிருந்தது. கட் கிபலைன் கட்சியினரான கொடுங்கோலன் எஸ்லினோ ரோமனா வுடன் அடிக்கடி சண்டை ஏற்பட்டது. வெரோனாநனர் பதுவையின் எதிரி. அதையும் சமாளிக்க வேண்டிய நிலை. அமைதியில்லா சூழ்நிலை இதனால் நிலவியது. த சில நாட்களுக்குப் பின் அவர் தனிமையான ஒரு இடத்திற்குச் சென்று, ஞாயிறு நாட்களுக்கான மறை உரையை எழுதலானார். ஆண்டின் எல்லா ஞாயிறு நாட்களுக்கும் இவை எழுதப்பட்டதால் மிகவும் பலனுடையதாயிற்று.

“நூலில் நிறைவிருப்பின் சர்வேசுரனுக்கு நன்றி சொல்வீர். குறை இருப்பின் என் அறியாமையால் ஆனது எனப் பொறுப்பீர்” என இறுதியில் எழுதி முடித்தார்.

# 17. பிற பயணங்கள்

ஓய்வின்றி இத்தாலியில் பல இடங்களுக்கு கால் நடையாகச் சென்று போதித்தார். இத்தாலி எங்கும் மத மறுமலர்ச்சியும் விழிப்புணர்வும் ஏற்பட்டன. 1228ல் சிவதாலே, திரேஸியா, வெனிஸ் நகரங்களில் போதித்து புதுமைகள் செய்தார். மீட்புப் பணி மீது அவருக்கிருந்த ஆர்வம், அவரை பெரேரா, பிளாரன்ஸ் பட்டணம் செல்லத் தூண்டியது. அங்கு சென்று பிரசங்கங்கள் செய்தார். பிளாரன்ஸ் நகரில் நெடு நாள் தங்கினார்.

அவர் இங்கு செய்த பிரசங்கங்கள் பல பாவிகளை மனந்திருப்பியது. பின் மிலான் சென்றார். இங்கு வால்தென்ஸ் என்ற பேதகத்தினர் பல தப்பறைகளைப் பரப்பி பூசல்களைக் கிளப்பினர். அதனால் மிலான் அமைதியில்லா நிலையில் இருந்தது. பதிதப் பிரிவினர் பல தவறான கருத்துகளை மிலானில் பரப்பி வந்தனர். மக்களிடையே கட்சி, பூசல்களை ஏற்படுத்தினர். இதனால் அந்நகர் அமைதி இழந்து காணப்பட்டது.

பதிதத்தை ஒடுக்கும் பணி அந்தோணியாரக்குப் புதிதல்லவே! அவரின் போதனையால் அங்கு மீண்டும் சமாதானம் நிலவியது. எத்தனை பேதகத்தினர் வாய்களை அவர் நாவன்மை அடக்கியது! எத்தனை ஆயிரமாயிரம் பதிதர்களை அவர் மனந் திருப்பியுள்ளார்! இங்கும் அவர் மக்களிடையே சமாதானத்தை நிலை நாட்டினார்.

சண்டை சச்சரவுகள் நீங்கின. பேதகமும் அழிந்தது. பின் அவர் கிரமோனாநகர் சென்று, அங்கு துறவிகளுக்கு ஒரு மடத்தைக் கட்டினார். அதன் பின் பிரேஸியா பட்டணஞ்சென்று அங்கும் பேதகத்தைக் களைந்தார். அதன்பின்னர் பிரேனோ, திரெந்து, மாந்துவா, வெரோனா “ பட்டணங்களில் போதித்தார். பலரை மனந்திருப்பினார். பிணியாளர்களைக் குணமாக்கினார்.

சபைத்தலைவர் பதவி போதகப்பணிக்கு முட்டுக் கட்டையாக இருந்தது. எனவே சபைத் தலைவர் பதவியிலிருந்து தன்னை விடுவித்துவிடவேண்டுமென்று 1230ல் விண்ணப்பம் செய்தார். இவ்வருடம் கூடிய துறவிகள் மாநாடு அவரின் வேண்டுகோளை ஏற்றது. பின்னர் பாவெர்னா நகர் வந்தார். இங்குதான் அசிசி பிரான்சீஸ் ஐந்து காயம் பெற்றார். அவர் வரவால் துறவிகள் மகிழ்ந்தனர். ஐந்து காயங்கள் பெறும் முன் பிரான்சீஸ் தங்கிய அறையை அவர் தங்கிட அளித்தனர். தாழ்மை மிகும் அந்தோணியார் அதை ஏற்கவில்லை. பதுவை செல்வது வரை, தான் அமைத்த ஒரு குடிலில் கடின தவம் செய்து வந்தார்.

**இரண்டாம் முறை உரோமாபுரி பயணம்**

“போர்கிலாங்குவில் 1230 மே திங்கள் 25ஆம் நாள் சபையின் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தனது ஆன்மீகப் பணியின் பொருட்டும், உடல் நலமில்லாமலிருப் பதாலும், மாநாட்டுப் பொறுப்புகளில் இருந்து தன்னை விடுவிக்க வேண்டு மென்று விண்ணப்பித்தார். அது ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பொது அமர்வில் சபையின் மாற்றம் தேவை சட்டங்களைத் தளர்த்த வேண்டும் என ஒரு சாராரும் கூடாது என மற்றவரும் வாதிட்டனர். ஒரு முடிவிற்கும் வர இயலவில்லை .

பிரான்சீஸிற்குப் பின் பொதுத் தலைவரான எலியாஸ், சபைச் சட்ட திட்டங்களை மதிக்கவில்லை. விதிகளை தனக்கு ஏற்ப தளர்த்தினார். சபையின் கட்டுப்பாடுகளுக்கு எதிராக ஒரு பெரிய கோவிலைக் கட்டினார். சபையின் வறுமை வார்த்தைப்பாட்டினை பின்பற்றாத இவர் தனக்கென ஒரு குதிரையை வாங்கிப் பயன்படுத்தினார். சபையாரோடு சேர்ந்து உணவுச்சாலையில் உணவருந்தவில்லை. தனியாகச் சுவையான விருந்தினை உண்பார். இத்தகைய வசதிகளை விரும்பிய பல துறவிகள் அவர் பக்கம் சாய்ந்தனர். அந்தோணியார் ஆதாம் என்ற ஆங்கிலத் துறவியை தம்முடன் அழைத்துக் கொண்டு இரண்டாம் முறை உரோமாபுரி சென்றார். பாப்பிறை 9ம் கிரகோரியாரிடம் எலியாஸின் சீர்கேடுகளைப் பற்றி முறையிட்டார். பாப்பு எலியாசை நேரில் அழைத்து விசாரணை செய்தார். அவர் பேரில் சுமத்தப்பட்ட குற்றங்கள் அப்பட்டமாயின. எலியாசை, பரிசுத்த பாப்பரசர் பதவியிலிருந்து அகற்றினார். - மீண்டும் பதுவைப் பதியினை அடைந்தார். அவரது தவக்கால பிரசங்கத்தை நகர ஆயரும், குருக்களும், திரளான மக்களும் கேட்டுப் பயனடைந்தனர். கூட்டம் நாள்தோறும் வளர்ந்து கொண்டே வந்தது. பக்கத்துக் கிராம மக்களும் திரண்டு வந்தனர்.

அவரது உடையின் ஒரு பாகத்தைக் கத்தரித்துச் செல்ல சில பக்தியுள்ள பெண்கள் கத்தரிக்கோல் கொண்டு வந்தனர். பக்தியுள்ள வாலிபர் சிலர் துணியை வெட்டாமலிருக்க அவருக்கு காவலாய் நின்றனர்.

அவரது பிரசங்கத்தைக் கேட்டு, பலர் மனம் வருந்தி பச்சாத்தாபம் எனும் தேவ அருள் சாதனம் பெற்றிட வந்தனர்.

பல குருக்கள் - துறவிகள், பாவசங்கீர்த்தனம் அளித்தனர். புனிதரும் காலை முதல் மாலை வரை அன்ன ஆகாரமின்றி பாவசங் கீர்த்தனம் கொடுத்து வந்தார்.

# 18. பதுவைப் பதியர்

“உங்கள் செல்வம் எங்குள்ளதோ அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும்” (மத் 6.்.21)

பதுவைப் பதியில் புதுமைகள் செய்து நல்லுரையாற்றி, தவறினை சுட்டிக்காட்டி ஞான மறுமலர்ச்சியை ஏற்படுத்தியவர் அந்தோணியார். தாயகம் போர்ச்சுக்கல் பிறந்த ஊர் லிஸ்பன் சேர்ந்தது அகஸ்தீனார் மடம் புகுந்தது கப்பூச்சின் சபை விரும்பியது வேத சாட்சியாக ஆனது மறை போதகராக உரிமை கொண்டாடியது பதுவை மாநகர் இவை யாவும் தேவ திருவுளம்

அவர் பிரசங்கம் செய்யும்பொழுது வணிகர்கள் கடைகளை மூடி பிரசங்கம் கேட்பார்கள். பெட்டிக்கடை வைத்திருப்பவர்கள் அருகில் அமர்ந்து அவர் சொல்வதை உன்னிப்பாய்க் கேட்பார்கள். ’

**சோதனையில் வெற்றி**

எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் சுத்த போசனம் அனுசரிக்க வேண்டுமென்பது சில வருடங்களுக்கு முன்பு வரை கத்தோலிக்கர் !! கண்டிப்பாக கடைப்பிடித்து வந்த கட்டளையாக இருந்து வந்தது. ம். உலகின் மாறும் சூழ்நிலைக்கேற்பவும், ஒரு வேளை கூட உணவு கிடைக்காத ஏழைகளின் பொருட்டும் இச்சட்டம் அண்மையில் அகற்றப்பட்டது. அந்தோனியாரை சில பதிதர்கள் ஒரு விருந்திற்கு அழைத்தனர். அவரும் சம்மதித்தார். இறைச்சியை மீனைச் சமைப்பது போல சமைத்து, அவர் முன் வைத்தனர். தேவ அருளால் அந்தோணியார் ( இதனை அறிந்தார். செபம் செய்து உணவின் மீது சிலுவை அடையாளம் கல் ஸ்ரீ வரைந்தார். புலால் உணவு மீன் உணவாக மாறிவிட்டது. உண்டார்,

பதிதர் அவர் உண்டபின் அவர் சுத்த போசன நெறியை மீறியதாகச் சொல்லி இழித்துரைத்தனர். எஞ்சியிருந்த உணவை அவர் அவர்களிடம் காட்டினார். அது மீன் உணவாக இருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்து, “இவர் தேவ அருள் பெற்றவர். இவரை சோதிக்க நம்மால் இயலாது“ என உரைத்தனர். அவரின் மதமே உண்மையான மதம் என பறைசாற்றினர். இப்புதுமை பற்றிய செய்தி எங்கும் பரவவே, அதன் பின் அவரை சோதித்திட எவரும் துணியவுமில்லை , முன் வரவும் இல்லை .

ஒரு நாள் பசாசு, உலகின் எல்லையை உம்மால் காட்ட முடியுமா? நான் காட்டுகிறேன் என்றதாகவும், அந்தோணியார் சிலுவை அடையாளம் வரைந்து இது தான் எல்லையென்றதாகவும் - பரம்பரை செய்தி கூறுகின்றது.

அவர் பதுவாபுரியில் மூன்று ஆண்டுகளே திருத்தொண்டாற்றினார். ஆயின் அவரது சாதனைகள் பல. பதுவாபுரி அவரால் அனைத்துலகப் புகழ் பெற்றது.

## 19. வெட்டி வீழ்த்திய கால் ஒட்டுதல்

பதுவை நகரில் லியொனார்டு என்ற ஒரு வாலிபன் வாழ்ந்து வந்தான். மனம் போன போக்கெல்லாம் சென்றான். பெற்ற தாயை மிதிக்கும் அளவிற்கு அவன் பணிவற்றவனாக வாழ்ந்தான். ஒரு நாள் தன் தாயை எட்டி உதைத்தான். அவள் வலி தாங்காமல் தரையில் வீழ்ந்தாள்.

அந்தோணியாரின் மறை உரையைக் கேட்டு குற்றம் புரிந்த வாலிபனின் நெஞ்சம் வருந்தியது, திருந்தியது. அந்தோணியாரிடம் பாவசங்கீர்த்தனம் செய்யச் சென்றான்.

அவர் "உன் கால்கள் இடறலாயிருந்தால் அதனை வெட்டி எறி ஏனெனில் நீ பரம் சென்றிட அது தடையாயிருக்கும்" என்ற வேத வசனத்தை நினைவூட்டினார்.

அவரது அறிவுரையை வேதவாக்காக எடுத்துக் கொண்ட அவன் உடனே வீடுசென்று தன் தாயை உதைத்த காலை வெட்டிவிட்டான்.

இச்சம்பவம் காட்டுத்தீ போல் எங்கும் பரவியது. இளைஞனின் தாய் அந்தோணியாரிடம் வந்து நடந்ததைக் கூறினாள். அவளை அமைதிப் படுத்தி அவளுடன் சென்று, அவ்விளைஞனின் காலை எடுத்து இணைத்து 'சிலுவை அடையாளமிட்டு செபித்தார். கால் முன்பு போல் ஒட்டிக் கொண்டது. புதுமையின் செய்தி எத்திக்கும் பரவியது.

இன்று பல பிள்ளைகள் பெற்றோருக்குப் பணிவது இல்லை. தெய்வ பக்தியும் அவர்களிடம் இல்லை. ஆடை அணிவதில் அடக்கமில்லை . நாவடக்கமோ ஒரு சிறிதும் கிடையாது. அறநெறிகள் அவர்களுக்கு எட்டிக்காய், மரம் சாயும் பக்கம்தானே விழும். அந்தோணியார் இவர்களுக்கு நல்லாசிரியராக அமைகின்றார். " பின் தரப்பட்ட வேத வசனங்களை இவர்கள் சிந்தித்து திருந்திட இஸ்பிரித்து சாந்துவு அருள் புரிவாராக:

1. தன் தந்தையையும் இகழ்ந்து, தன் தாயின் பிரசவவேதனை களையும் புறக்கணிக்கிறவனது கண்ணை நீரோட்டத்திலுள்ள காக்கைகள் பிடுங்கவும், கழுகின் குஞ்சுகள் அவனைத் தின்னவுங் கடவன்" (பழமொழி 30.:.17)

2. “தன் தாயை மதிக்கிறவன் - செல்வங்களைச் சேர்த்தவன் தன் தந்தையை மதிக்கிறவன் - பிள்ளைகளால் மகிழ்ச்சி அடைவான் அவன் வேண்டுதலும் கேட்கப்படும், தன் தந்தையை மதிக்கிறவன் நெடுங்காலம் வாழ்வான்” (சீராக் 3:5-7) –

3. தந்தையின் ஆசி பிள்ளைகளின் குடும்பங்களை நிலை நாட்டும். தாயின் சாபமோ பிள்ளைகளுடைய குடும்பங்களின் அடித்தளத்தைப் பிடுங்கி விடும். (சீராக்: 3.˙.൩1)’

4. மகனே, உன் தந்தையின் முதமையில் அவனை ஆதரி, அவன் வாழ்நாளில் அவனை மனம் நோகச் செய்யாதே, அவன் அறிவு குறைந்ததாயின் மன்னித்துக்கொள். உன் விவேகத்தை முன்னிட்டு அவனை நிந்தியாதே, ஏனென்றால் தந்தைக்கு காண்பிக்கப்படும் இரக்கம் ஒரு போதும் மறக்கப்படமாட்டாது. உன் தாயின் குற்றத்தை சகிப்பதனால் உனக்கு நன்மை ஏற்படும். ஏனென்றால் நீ நீதியில் நிலைநாட்டப்படுவாய். உன் துன்ப நாட்களில் ஆதரிக்கப்படுவாய். (சீராக் 3:14-17)

# 20. பணப் பெட்டியில் இருதயம்

செல்வந்தன் ஒருவனின் அடக்கத்தின் போது பிரசங்கம் செய்ய அந்தோணியார் அழைக்கப்பட்டார். அந்தோணியார் முதலில் உடன்படவில்லை .

பண ஆசையால் இவன் தன் வாழ்நாளைப் பாழாக்கியவன், ஆலயஞ் செல்ல நேரமில்லை. செபம் செய்ய சமயமில்லை . பொருள், பொருள்“ என எண்ணி தீய வழிகளில், பொருள் சேர்த்தவன். அநியாய வட்டிவாங்கி பணத்தைத் திருப்பித் தராத ஏழைகளை எட்டி உதைத்து : அடித்து காயப்படுத்திய கொடுமைக்காரன். பொருள் சேரச்சேர இன்னமும் பொருள் வேண்டுமென்ற பேராசை கொண்டு பழி மேல் பழியையும் பாவத்திற்குமேல் பாவத்தையும் கட்டிக்கொண்டான். இயேசுநாதர் உவமையாகச் சொன்ன அறிவில்லா செல்வந்தனைப்போல் இருந்தான்.

இந்த சீமான் தன் வயல்களில் அமோகமாக விளைந்த தானியங்களைத் தன் களஞ்சியத்தில் சேர்த்தான். இறுமாப்புடன் அவன் தனக்குள்ளே சொல்லிக் கொண்டது. “நெஞ்சே, பல்லாண்டுகளுக்கு வேண்டிய பொருள் உனக்கு ஏராளமாய் உள்ளது. இளைப்பாறு உண்டு குடித்து விருந்தான் என்று சொல்லிக் கொள்வேன் என்றான் ஆனால் கடவுள், “அறிவிலியே“ இன்றிரவே உன் உயிரை வாங்கப் போகிறார்கள். நீ தேடி வைத்தது யாருக்கு கிடைக்குமோ?“ என்றார். கடவுள் முன் செல்வம் இல்லாதவனாய், தனக்காகவே செல்வந்திரட்டுகிறவன் இவ்வாறே இருக்கிறான்” (லூக் 12.:.19-21)

அந்தோணியார் இச்செல்வந்தனைத் திருத்த முயன்றார். அவனுக்கு எச்சரிக்கை விடுவித்தார். நாம் இறக்கும்போது நம்முடன் வருவது நமது பாவ புண்ணிய மூட்டைகளே, நித்தியத்திற்கும் தண்டனைக்குள்ளாகாது மனம் வருந்தி ஈகையால் ஏழைகளுக்கு உதவ வேண்டும் என்றார். அவரின் நல்லுரைகள் செவிடன் காதில் ஊதிய சங்கு போலாயிற்று. மூர்க்கனும் முதலையும் கொண்ட பிடியினை - விடாதது போல அப்பேராசைக்காரனும் மனம் திரும்பவில்லை. திடீரென விழும் அடி மரம் போல், சடுதி மரணமடைந்தான்.

“உங்கள் செல்வம் எங்குள்ளதோ, அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும்” (மத் 6.21) என்ற வேத வசனத்தின் மீது அவர் மறை உரையாற்ற விரும்பினார். இதனை அவன் உறவினர்கள் விரும்பவில்லை . மரபுப்படி அவனை புகழ்ந்து பேசுவார் என எண்ணினர். விட்டுக் கொடுக்காமல் பேராசையின் நிலையை பிரசங்கம் செய்து முடித்தார்.

இறுதியில் உறவினர் அவன் சவப்பெட்டியைத் திறந்தனர். அவனது இதயம் அங்கில்லை் பணப்பெட்டியில் இருதயம் இருந்ததை கண்டு அஞ்சி நடுங்கினர்.

ஒட்டகமானது ஊசித்துவாரத்தில் நுழைவது எளிது செல்வந்தன் பரம செல்வம் மிக அரிது என உணர்ந்தனர்.

## 21. மனந்திரும்பிய திருடர்கள்

களவு செய்யாமல் இருப்பாயாக என்பது பத்துக் கற்பனைகளில் ஒன்று. பிறர் பொருளைக் கவர்வதால், பிறருக்கு ஏற்படுவது இழப்பு இதனை ஈடு செய்வதுவரையில் தண்டனைக்கு ஆளாக வேண்டும். பல சமயங்களில் திருட்டால் கொலை நடைபெறுவதும் உண்டு. ஒன்றும் அறியாதவர்கள், கொடூரமாய் தாக்கப்பட்டு குற்றுயிராய் கிடக்கும் நிலையும் வருகிறது.

திருட்டுத்தொழில், முதல் இல்லா வியாபாரம் என எண்ணி அதைச் செய்து வந்த கொள்ளைக் கும்பலொன்று அந்தோணியார் பிரசங்கம் செய்யும் இடம் சென்றது. மறை உரை கேட்க வரும் திரளான மக்களிடம் வழிப்பறி செய்யலாம் என்பது. இவர்கள் திட்டம். கூட்டத்தோடு கூட்டமாய் இவர்கள் கலந்து விட்டனர். இதை அந்தோணியார் பார்த்து விட்டார். திருட்டின் இழி நிலையையும் அது கொண்டு வரும் நித்திய தண்டனையையும் எடுத்துக் கூறினார். சிலுவையில் அறையப்பட்ட கள்வன் தீஸ்மாஸ் ஆண்டவரிடம் இரந்து மன்றாடி பரம் அடைந்ததை விளக்கி, மனம் வருந்தினால் மன்னிப்பு உண்டு என்று உருக்கமாய்ச் சொன்னார்.

திருடர்கள் பலர் அவர் பிரசங்கம் கேட்டு மனம் திரும்பினர். அந்தோணியாரிடம் சென்றனர். மீண்டும் திருடச் சென்றால் மடிவது உறுதி என அந்தோணியார் புத்தி சொன்னார். சிலருக்கு அது செவிடர் காதில் ஊதிய சங்கு போலாயிற்று. பழைய தொழிலுக்கே திரும்பினர் அவ்வாறு சென்றவர்கள் மற்றொரு கொள்ளைக் கூட்டத்தாரால் பிடிக்கப்பட்டு கொல்லப்பட்டனர். மற்றவர் பிழைத்தனர். இவ்வரலாற்றை, தப்பிய ஒரு திருடனே வெளியிட்டான். இல்லாததை உள்ளதாக கற்பனை செய்து பேசுபவர் அந்தோணியார் அல்லவே!

அவன் இதனை 1292 ஆம் ஆண்டு, ஒரு அசிசியார் சபைத் துறவியிடம் வெளியிட்டான். அந்தோணியார், அவன் பாவப்பரிகாரமாக 12 முறை உரோம் தூய இராயப்பர், சின்னப்பர் கல்லறையை ஆண்டு தோறும் சந்தித்து வரவேண்டும் எனக் கட்டளையிட்டதாயும், இதை தான், இப்பொழுது முடித்து விட்டதாகவும் உரைத்தான். தன் பழைய வாழ்வை நினைக்கும் போது கண்ணீர் வடித்து வருந்துவதாயும் அறிக்கையிட்டான். இப்பொழுது தனக்கு மன அமைதி

உள்ளதாகவும் உரைத்து தன்னை நல்வழிப்படுத்திய அந்தோனியாரை நெஞ்சாரப் புகழ்ந்தான்.

பாப்பிறையின் திருமுகம் -பயா பாப்பிறை 9வது கிரகோரியார் அந்தோணியாரக்கு ஒரு திருமுகம் அனுப்பினார். அவர் எழுதிய ஞாயிற்றுக்கிழமைப் பிரசங்கங்கள் மிகவும் பயனுள்ளவைகளாக இருந்தமையால் முக்கிய திருநாட்களின் போது ஆற்ற வேண்டிய பிரசங்கங்களையும் அவரையே எழுதிட அவ்வாணையில் பணித்திருந்தார்.

"அன்புச் சகோதரர் அந்தோனியாரே! நீர் திருச்சட்ட கற்பலகை, ஞானத்தின் கருவூலம், உண்மையான வாக்குத்தத்த பெட்டகம், உமது சபை விதிக்கும் பணிகள் அனைத்திலிருந்தும் உம்மை விடுவிக்கிறேன். நீர் ஏனைய சகோதரர்களின் முன்மாதிரிகையாக நம்மால் நியமிக்கப்பட்டுள்ளீர். இது முதல் செபம், பிரசங்கங்களை எழுதுதல், மறை உரை ஆற்றுதல் போன்ற பணிகளில் ஈடுபடுவீராக. நீர் விரும்பும் இடமெல்லாம் போகலாம், போதிக்கலாம்" எனத் திருமுகத்தில் எழுதியிருந்தார்.

1231ஆம் ஆண்டு பாப்பிறை பணித்த பணியைத் தொடங்கினார். தூய சின்னப்பர் திருநாள்வரை எழுதி முடித்தார். இவ்வேலையை தான் இவ்வுலகில் முடிக்கப் போவதில்லை என அவர் அறிந்தார். பாவிகளை கரை சேர்ப்பதில் அவர் அதிக ஆன்ம தாகம் உடையவராய் இருந்தார். இது என்றுமே அவரில் தணியவில்லை . "நீதிமான்களை அல்ல, பாவிகளையே அழைக்க வந்தேன்" என்ற ஆண்டவரின் அருள் வாக்கை தன் நெறி எனக் கொண்டார்.

"முடிவில்லா வாழ்வை பெறும் பொருட்டு அந்த ஒரே பேறான மகனையே அளிக்கும் அளவுக்கு கடவுள் உலகின்மேல் அன்பு கூர்ந்தார்" (அரு 3:16)

# 22. கடன் நிவாரணச் சட்ட ஆலோசகர்

“ஏழைகளுக்கு இரங்குகிறவன் ஆண்டவருக்கு வட்டிக்குக் கொடுக்கின்றான்” (பழமொழி 19:17)

எரியும் திரி எரியும் திரி பிறருக்கு வெளிச்சம் தர தன்னையே மாய்த்துக் கொள்கிறது. இயேசு உலகின் ஒளி, நாம் ஒளியில் நடந்திட தன் உயிரையே அர்ப்பணித்தார். இருளில் வந்த மக்களுக்கு மெய் ஒளியினைக் காட்டச் சென்று உயிர் துறந்த வேத சாட்சிகள் பலர்.

இதோ எளியும் திரிபோல் தேவநேசத்தால் பற்றி எரிந்த அந்தோணியாரம் தனது கடின உழைப்பால் உடல் நலம் குன்றிவரலானார். ஆயினும் அவர் தனது திருப்பணியை விட்டவரல்ல.

அநியாய வட்டி வாங்குதல் அக்காலத்தில் பதுவையில் அதிகமாகக் காணப்பட்டது. கடன்பட்டவர்கள் சிறைபட்டனர். நாடு இழந்தனர். வீடு இழந்தனர். துன்புற்றனர். அவர்கள் மீது அவர் இரக்கமுற்றார். அநியாயவட்டி வாங்குபவர்களை வன்மையாகக் கண்டித்தார்.

“வறியோருடைய உணவு அவர்களுடைய உயிர். அவர்களிட மிருந்து அதைப் பறிக்கிறவன் இரத்தத்தின் மனிதனாய் இருக்கிறான்” (சீராக்: 34:25)

“ஒடுக்கப்பட்டவர்களை உரிமை மக்களாய் விடுதலை செய், சுமையானதை எல்லாம் உடைத்தெறி” (இசையாஸ் 58:6)

அவரின் மறை உரை கேட்டு மனமாற்றம் அடைந்தவர் தங்கள் கடன்காரர்களுக்கு மன்னிப்பு அளித்தனர். நமது கடன்காரர்களுக்கு நாம் மன்னிப்புத் தர மறுத்தால் சர்வேசுரன் நம்மை மன்னிப்பாரா?

அரசின் சம்மந்தப்பட்ட துறையினரிடம் அந்தோணியார் கடன் நிவாரணம் பற்றி எடுத்துரைத்து 1231ல் கடன் நிவாரண சட்டம் பிறப்பிக்கச் செய்தார். அச்சட்டம் கடன்பட்டவரை சிறைப்படுத்தலாகாது, அவர்தம் சொத்துக்களை ஈவு இரக்கமின்றி எடுத்துக் கொள்ளலாகாது, அநியாய வட்டி வாங்கலாகாது- என வரையறுத்தது.

“பிரான்சிஸார் சபை, வணக்கத்திற்குரிய ஞானாசிரியர் அந்தோனி யார் விருப்பப்படி இச்சட்டம் 1231ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 15ம் நாள் அமுலாக்கப்படுகிறது” என்று அச்சட்டத்தில் குறிப்பிட்டுள்ளது. அதனை இன்றும் காணலாம்.“

“அநியாய வட்டி பெறுபவன், மலத்தினை அதிக சிரமப்பட்டு பந்தாக உருட்டும் வண்டு. எதிர்ப்படும் கழுதை ஒன்றின் காலில் மிதிபட்டு அவ்வண்டும், உருண்டையும் அழிவதைப் போல கஞ்சனும் அநியாய வட்டி வாங்குபவர்களும் இதே நிலையையே அடைவர். அசுத்த பணத்தை இவர்கள் கஷ்டப்பட்டுத் திரட்டுகின்றனர். சாத்தான் அவர்களை இறுதியில் கொல்கின்றது. விளைவு? அவர்கள் ஆன்மா பசாசின் உடமையாகிறது. உடல் புழுக்களுக்கு இரையாகின்றது. சேர்த்து வைத்த பொருள் உறவினர்களை அடைகின்றது:

“பணத்தையும் மாய்ந்து போகும் புகழையும் விரும்புபவர் சாத்தான் முன் விழுந்து அவனை ஆராதிப்பவராவர்” என நம் அறநெறி அண்ணல் அந்தோணியார் எழுதியுள்ளார்.

# 23. குழந்தையின் சாட்சி



பெராரா பட்டணத்தில் ஒரு பெரும் பிரபு இருந்தான். அவனுக்கு பக்தியுள்ள ஒரு மனைவியும் இருந்தாள். அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது.

அவளது கற்பின் மேல் அவனுக்குச் சந்தேகம் உதித்தது. இக்குழந்தையின் தந்தை யாரோ? எனக் கேட்டதோடு அவளை மிகவும் துன்புறுத்தினான்.

பலநாள் துயருற்றவள் அந்தோணியாரிடம் இது பற்றிச் சொல்லி அழுது தனக்கு உதவி செய்யக் கேட்டுக் கொண்டாள். அந்தோணியார் மனமிரங்கி அவளின் இல்லம் சென்று குழந்தையை தன்னிடம் கொண்டு வரும்படி பணித்தார்.

“களங்கமில்லாக் குழந்தையே! மாட்டுத் தொழுவில் பிறந்த மாமரியின் பாலகன் திருப்பெயரால் உண்மையைச் சொல்ல உனக்கு கட்டளை இடுகிறேன் நீ யார்! குழந்தையே உன் தந்தை யார்”? என அதிகாரத்துடன் கேட்டார்.

அந்த சின்னஞ்சிறு குழந்தை “இதோ! என் தந்தை” என பிரபுவை சுட்டிக் காட்டியது.

குடும்பத்தில் மனைவி கணவன் மீதும், கணவன் மனைவி மீதும் சந்தேகப்படுவதால் சமாதானம் குலையும் என்று அவர்களுக்கு எடுத்துரைத்தார்.

பின் அக்குழந்தையை தகப்பனிடம் கொடுத்தார். “இது உன் குழந்தையே!” உன் மனைவி உண்மையுள்ளவள். “நீ அவளை அன்புடன் நடத்து” என்று புத்திமதி கூறிச் சென்றார்.

தன் தவறை உணர்ந்த அந்தப் பிரபு மனைவியிடம் மன்னிப்புக் கேட்டான். புனிதரின் ஆசீரையும் பெற்றான்.

# 24. கொலைக் குற்றத்திலிருந்து தந்தையைக் காத்தது

தன் தந்தை கொலைக்குற்றம் சாட்டப்பட்டு நீதி மன்றத்தில் குற்றவாளியாக நிறுத்தப்பட்டிருக்கிறார் என்பதை ஞானப் பார்வையால் அறிந்த அந்தோணியார் தன் தந்தை குற்றமற்றவர் என்று தெரிந்து லிஸ்பனுக்குப் புறப்பட்டார்.

இத்தாலிக்கும் - லிஸ்பனுக்கும் இடையில் நெடுந்தூரம். புறப்பட சில நிமிடங்களில் லிஸ்பன் அடைந்தார். இவர் தந்தை மார்த்தீனது தோட்டத்தில் ஒரு பிணம் கிடைத்ததை வைத்து மார்தீன் தான் கொன்றிருப்பார் என்று முடிவு செய்து காவலில் வைத்தனர்.

நீதிமன்றம் சென்ற அந்தோணியார் நடுவர்களிடம் தன் தந்தை குற்றமற்றவர் என்று வாதிட்டார். அவர்கள் ஏற்க மறுத்தனர். “இறந்தவனைக் கேட்போம்” என்றார். “இறந்தவனைக் கேட்பதா? அவனை அடக்கஞ் செய்தாகி விட்டதே?” என்றனர். முடிவில் இறந்தவனின் கல்லறை தோண்டப்பட்டு சவப்பெட்டி திறக்கப்பட்டது.

அந்தோணியார். “ஓ மனிதா! சர்வேசுரன் பெயரால் கேட்கிறேன். உன்னைக் கொன்றது யார்?“ எனக் கேட்டார். - சடலம் உயிர் பெற்றது. அங்கு நின்ற கொலையாளியைச் சுட்டிக் காட்டி “இவனே” என்றது.

இறந்து உயிர் பெற்றவன் தான் கட்டிக்கொண்ட ஒரு கனமாக பாவத்திற்காக அவரிடம் பாவசங்கீர்த்தனம் செய்து மீண்டும் மடிந்தான்.

உண்மைக் கொலையாளி கைது செய்யப்பட்டான். பகையின் காரணமாக பழிவாங்கும் எண்ணத்துடன் பிரேதத்தை மார்த்தீன் பிரபுவின் தோட்டத்தில் போட்டதாக ஒப்புக் கொண்டான். தந்தை மகிழ்ச்சி அடைந்தார். தன் மகனை இல்லம் வருமாறு அழைத்தார்.

“மகனே நீ சென்றதிலிருந்து உன் தாய் உன் நினைவாகவே இருக்கிறாள். நீ என்னைக் காப்பாற்றி யதைக் கேட்டால் மகிழ்வாள். வீடு வந்து செல்” என்றார். அவரோ,... “வானகத்திலுள்ள என் தந்தையின் விருப்பப்படி நடக்கிறவன் எவனோ அவனே என் சகோதரனும் சகோதரியும் தாயுமாவான்” (மத் 12.59) என்ற இயேசுநாதரின் வார்த்தையில் பதிலுரைத்து திரும்பி விட்டார்.

அந்தோணியார் பிரசங்கம் செய்யும்போது ஞானக் காட்சியில் தந்தையின் நிலையை அறிந்ததாகவும். பிரசங்கத்தை நிறுத்தி விட்டு, சென்று சில நிமிடங்களில் திரும்பியதாகவும், ஒரே சமயம் இரு இடங்களில் இருந்ததாகவும்.

பின் மீண்டும் மறையுரையை தொடர்ந்ததாகவும் சில வரலாற்று நூல்களில் காணப்படுகின்றன.

## 25. உலகைச் சுற்றல்

ஒரு நாள் சாத்தான் அந்தோணியாரிடம் வந்து "நீர் எவ்வளவோ புதுமைகளைச் செய்கின்றீரே! உலகினை ஒரு நொடியில் சுற்றிவர உம்மால் முடியுமா? உம் கடவுள் அதற்கு உதவுவாரா? என்னால் முடியும், என் வல்லமைதான் பெரிது" என்றது.

அந்தோணியார் சிலுவை அடையாளத்தை தரையில் வரைய அது சுடர் விட்டு ஒளிர்ந்தது. அந்தோணியார் அதைச் சுற்றி வந்தார்.

"சிலுவைதான் உலகு, உலக மீட்புச் சின்னம் சிலுவை, சிலுவையின்றி உலக மீட்பில்லை . இயேசு உலக இரட்சகர். சிலுவையின்றி மறு உலகில்லை . சிலுவை அழியாத உலகம்" என்றார். சிலுவையைக் கண்டஞ்சி பசாசு ஓடியது.

**கடுந் தவ வாழ்வு**

தமது மரணவேளை அடுத்து வருவதை அந்தோணியார் அறிந்தார். அதற்குத் தன்னை தயார் செய்ய காம்போசாம்பியர் என்ற இடத்திற்குச் செல்ல விரும்பினார். இங்கு துறவிகளுக்கென ஒரு இடத்தை அந்தோணியார் நண்பன் டீஸோ கொடுத்தான். இங்கு செல்ல மேலாளர்கள் அனுமதி தேவைப்பட்டது. எனவே சபைத்தலைவருக்கு ஒரு கடிதம் எழுதி அதனைத் தன் குடிலில் வைத்து வெளியில் சென்றார். மடத்துத் தலைவரிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தார் அக்கடிதத்தை சபைத் தலைவரிடம் எடுத்துச் செல்ல ஒருவரை அனுப்ப வேண்டும் என வேண்டினார். கடிதம் கொண்டு செல்பவர் வந்தார். ஆனால் கடிதம் காணப்படவில்லை: தான் அங்கு செல்வது தேவ சித்தமில்லை என எண்ணி அமைதியாயிருந்தார்.

ஒரு சில தினங்கள் சென்றதும் சபைத்தலைவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தோணியாரின் யோசனை நல்லது என்றும். அவர் காம்போசாம்பியர் செல்லலாம் எனவும் அக்கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. இக் கடிதத்தை தேவதூதன் ஒருவர்தான் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் என அனைவரும் நம்பினர். தான் அங்கு செல்வது தேவ திருவுளத்திற்கு ஏற்புடையது என அந்தோணியார் அறிந்து மகிழ்ந்தார்.

காம்போசாமபியர் என்ற இடத்திலுள்ள மடத்து ஆச்சிரமத்திற்குச் சென்றார். இவரது ஆருயிர் நண்பன் டீஸோ இங்கு வாழ்ந்து வந்தான். ஒரு தினம்

அவரைச் சந்திக்கச் சென்றார். அவன் எதிர் கொண்டழைத்து அன்புடன் உபசரித்தான். அவனுக்கு மரங்களால் நிறைந்த ஓர் வண்ணத்தோட்டம் இருந்தது.

அதைப்பார்த்த அந்தோணியார் ஒரு வால்நட் மரத்தைக்காட்டி அதில் தனக்கு ஒரு குடிசையினை செய்து தரவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். துறவிகளின் ஆதரவாளனான அவன் அவ்வாறே ஆறு கிளைகளைக் கொண்ட அம்மரத்தில் குடிசை கட்டிக்கொடுத்தான். இவருடன் சென்ற துறவிகள் லுக்காஸ், ரோஜர் என்பவர்களுக்காகவும் மற்றும் இரு குடில்களும் ஆக்கப்பட்டன.

கம் அந்தியகாலம் அருகில் உள்ளது என்பதை அறிந்த அவர், அதற்குத் தன்னை முற்றிலும் ஆயத்தஞ் செய்யலானார். தேவ உதவியால்தான் அனைத்தும் மாறுமென தேவ உதவிக்காக மன்றாடினார். முடிவு வரை நிற்க அவர் அருள் தேவை. இதற்கென அவர் குடிலில் கடின தவ வாழ்வை மேற்கொண்டார்.

# 26. புதுமைகளில் சில

**இரு இடங்களில் ஒருவர்**

தேவாலயம் ஒன்றில் அந்தோணியார் பிரசங்கம் செய்து கொண்டிருந்தபோது, திடீரென மடத்தில் கட்டளைச் செபம் செய்ய வேண்டியிருப்பதை நினைவு கூர்ந்தார். மௌனமானார். ஏதோ பெரிய காரியம் நடக்கிறது என மக்கள் எண்ணினர். மடத்திற்குச் சென்று, செபம் செய்து விட்டு திரும்பி வந்து மறை உரையைத் தொடர்ந்தார். இவ்வாறு ஒரே சமயத்தில் இரு இடங்களில் இருந்திடும் மேலான வரத்தை சர்வேசுரன் அவருக்கு அருளியிருந்தார்.

1226ம் ஆண்டு உத்தரிக்கிற ஆன்மாக்கள் திருநாளன்று தூய சின்னப்பர் ஆலயத் திடலில் பிரசங்கம் செய்தார். அவர் பேசிய பொருள்:

“மாலையில் அழுகை நமது விருந்தினன்காலையில் மகிழ்வு நமது விருந்தாளி” என்பதே

**தவளைகளை அடக்குதல்**

அந்தோணியார் வாழ்ந்த மடத்தைச் சுற்றியுள்ள நீர் நிலைகளில் ஏராளமான தவளைகள் வாழ்ந்தன. அவை எழுப்பிய ஒலி குருமட மாணவர்களுக்கு இடையூறாகவும், அவர்கள் படிப்பிற்கு தடையாகவும் இருந்தது. மேலும் ஒரே நிலையில் மனதை நிலைநிறுத்த செபம் செய்வதையும் தடுத்தது. கடின உழைப்பு, கனமான பாடச் சுமையுள்ள படிப்பு இவற்றால் சோர்ந்த அவர்களுக்கு அளிக்கப்பட்ட குறைந்த சமயத்தில் நித்திரை செய்யவும் இயலவில்லை . இதனால் அவர்கள் பெரும் அவதியுற்றனர். “மனிதர் என்றால் “பேசாதே“ என்றால் கேட்பார்கள். மண்டூகங்கள் அவ்வாறு கேட்காதே? நாம் சொன்னால்...? ஆனால் அந்தோணியார் அவைகளுக்கு கட்டளையிட்டால்? நிச்சயமாக் கேட்கும்” எனத் தங்களுக்குள் கூறலாயினர். இது பற்றி அந்தோனி யாரிடம் முறையிட்டனர். கனிவுடனும், பரிவுடனும் அவர்கள் குறையினைக் கேட்ட அந்தோணியார் வெளியிற் சென்று தவளைகளை நோக்கி: “தவளை சகோதரர்களே! அமைதியாக இருங்கள்” என்றார். அது முதல் அவைகளால் தொல்லை ஏற்படவில்லை. ஆம்! அந்தோனி யாருடன் சர்வேசுரன் எப்பொழுதும் இருந்தார். நம்பிய அவரை மகிமைப்படுத்தினார்.

**செல்வச் செருக்குற்றவன் திருந்துதல்**

பிரான்ஸ், புவான் வெலே நகரில் பெரும் செல்வந்தன் நல்ல பதவி வகித்தவன் - தீய வாழ்வு வாழ்ந்தான். ஆலயத்திற்கு வருவதில்லை மறையுரைகள் கேட்பதும் இல்லை. சாலையில் அவன் செல்லும் பொழுது அந்தோணியார் அவனுக்கு தலை வணங்கினார். அந்தோணியார். பெரும் பிரசங்கியார்,

பக்திமான், என அவன் கேள்விப்பட்டிருந்தான். அந்தோணியாரின் செய்கை அவனுக்கு ஆத்திரத்தை மூட்டியது. இவ்வாறு மூன்று தினங்கள் நிகழ்ந்தது. ஒரு நாள் அவன் முன் நடுச்சாலையில் முழந்தாட்படியிட்டார் அந்தோணியார். அவன் வெருண்டான். “சர்வேசுரன் உன்மீது அன்புள்ளவர். கருணை உள்ளவர், எனக்கு வேதசாட்சியாகும் பேற்றை சர்வேசுரன் தரவில்லை. உனக்கு தருவதாக சர்வேசுரன் எனக்கு அறிவித்தார். மனந்திரும்பு” என்றார். அவன் மௌனமாய் அவ்விடத்தை விட்டகன்றான். தன் வாழ்வை படிப்படியாய்த் திருத்தினான். சிலுவை யுத்தத்தில் பங்கேற்று பாலஸ்தீனாவில் வேத சாட்சியாய் இறந்தான்.) இறக்கு முன் அந்தோணியார் உரைத்த தீர்க்கதரிசனத்தை வெளிப்படுத்தினான்.

**அற்புத நீரூற்று குகை**

லிமேஜிலிருந்து 70 மைல்களுக்கு அப்பாலிருந்த பிரிவே என்ற நகரில் ஒரு புதிய மடத்தை அமைத்தார். இங்குள்ள மக்கள் பரம ஏழைகள். புனிதர் தனக்கென ஒரு குகையைத் தேடி அதில் வாழ்ந்தார்.

குடிநீர் இல்லாது துறவிகள் அவதிப்பட்டனர். புனிதர் சர்வேசுரனை ) வேண்டினார். ஒரு நீரூற்று அற்புதமாய் தோன்றியது. அவரது பக்தர்கள் அதனையும், அவர் குகையையும் இன்றும் சந்தித்து மகிழ்கின்றனர்.

**மழையிலிருந்து பாதுகாப்பு**

அவரது மறையுரையைக் கேட்க பெருவாரியான மக்கள் கூடினர். திடீரென இடியுடன் பெரும் மழை பெய்தது. அதனை மக்கள் பொருட்படுத்தவில்லை. அவரது அமுத வாக்கால் கட்டுண்டு இருந்த இடத்திலேயே இருந்தனர். ஒரு துளி மழை கூட அவர்கள் மீது விழவில்லை . மற்ற இடங்களில் பெரும் வெள்ளப் பெருக்கு. லிமேஜின் மக்கள் இதனைக் கண்டு வியப்படைந்தனர்.

தூயவர் இக்காலத்தில் மாந்தியோ நகர் மடத்திற்கு அடிக்கடி சென்று ஏகாந்த வாழ்வில் ஈடுபட்டதாகக் கூறப்படுகிறது.

**இறந்தவர்கள் உயிர் பெறல் இறந்த குழந்தை உயிர் பெறுதல்**

ஒரு பெண் தூயவரின் மறையுரையைக் கேட்க அதிக ஆசைப்பட்டு, தொட்டிலில் துயின்ற குழந்தையை வீட்டில் விட்டுவிட்டுப் பிரசங்கத்தைக் கேட்க ஓடோடிச் சென்றாள். மனநிறைவுடன் திரு உரையைக் கேட்டாள். நிம்மதியுடன் வீடு திரும்பினாள்.

வீட்டிலிருந்த குழந்தை இறந்து கிடப்பதைக் கண்டு துடியாய்த் துடித்தாள். அழுதவாறே புனிதரிடம் சென்றாள். நடந்ததைச் சொன்னாள்

“உன் குழந்தை விளையாடுகிறது சென்று பார்” என்றார். விசுவாசத்தோடு வீடு திரும்பினாள். மாண்ட குழந்தை விளையாடிக் கொண்டிருந்தது.

**கொதிநீரில் விளையாடிய குழந்தை பிழைத்தது**

ஒருபெண் புனிதரின் உரையைக் கேட்கச் சென்றாள். வீட்டில் குழந்தையுமிருந்தது. எரியும் தீ மீது வைத்த கொப்பறையும் இருந்தது. இதனை அவள் மறந்து விட்டாள்.

எத்தனை ஆர்வம் திருஉரைகேட்பதில் அவளுக்கு. பிரசங்கம் முடிந்தபின் கொப்பறையின் நினைவு வந்தது. பதறி ஓடி வந்தாள்

தூயவரின் அருளால் பிள்ளை கொதிக்கும் நீரில் விளையாடிக் கொண்டிருந்தது. எந்த விபத்தும் ஏற்படவில்லை .

அவரது மறை உரையின் சிறப்பையும், மக்கள் அதன் மீது காட்டிய அளவிலா ஆர்வத்தையும் விருப்பையும் இந்த நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுகின்றன.

**பிணமாண வாலிபன் உயிர் பெறல்**

ரோமாக்னா மாகாணத்தின் மேலாளர் பதவி 1227ல் தூயவருக்குத் தரப்பட்டது.

ஜெமானே பகுதியில் இவர் ஒரு சிறு மடம் கட்டினார். அவ்வழியே மாட்டு வண்டியில் ஒரு குடியானவன் வந்தான். தனக்கு உதவும்படி அவனைக் கேட்டார். வண்டியில் ஒரு வாலிபனின் பிணம் இருப்பதாகப் பொய்கூறிக் கடந்து சென்று விட்டான். அவரை ஏமாற்றி விட்டதாக எண்ணி சிறிது தூரம் சென்ற பின் வாலிபனை எழுப்பினான். வண்டியில் உயிருடனிருந்த வாலிபன் பிணமாய்க் கிடந்தான்.

புனிதரிடம் ஓடோடி வந்து பொய்யுரைத்தமைக்கு மன்னிப்புக் கோரினான். இறந்தவனை மீண்டும் உயிருடன் எழுப்பினார். அந்நகர மக்கள் அவர் சொன்னவைகளை அதன் பின்னர் தட்டவே இல்லை.

**உடைந்த கூஜா செம்மையாதல்**

அந்தோணியார் இன்னொரு துறவியையும் அழைத்துக்கொண்டு, கால் நடையாகப் புறப்பட்டார். மார்செயில்ஸ் நகரத்திற்குப் போய் அங்கிருந்து கப்பலில் இத்தாலி செல்ல வேண்டும். வெகுதூரம் நடந்து சென்ற இவர்கள் நடக்க வலுவற்று. தள்ளாடிப் போய்க் கொண்டிருப்பதை ஒரு ஏழைப் பெண் கவனித்து, அவர்கள் மீது இரக்கப்பட்டு அவர்களை தன் குடிசைக்கு அழைத்து வந்து, சிற்றுண்டி அருந்தி இளைப்பாறிச் செல்ல வேண்டுமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டாள், அவர்களும் அதற்கு இசைந்து வீட்டிற்குப் போனார்கள்.

அவர் இவர்களை அன்புடன் உபசரித்து அவ்விருந்திற்கு வேண்டிய பாத்திரங்களை இரவல் வாங்கி வந்தாள். சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்தாள். இவர்களைப் பந்தி அமரச் செய்து, பீப்பாயில் இருந்த திராட்சை ரசத்தை ஒரு பாத்திரத்தில் பிடித்துக் கொண்டிருந்த போது இரவல் வாங்கி வந்த அழகிய கண்ணாடிக் கூஜா ஒன்று தவறி கீழே விழுந்து உடைந்து விட்டது. உடைந்த ஒலி கேட்டு ஓடி வந்த அவள் இரசப்பீப்பாவின் அடைப்பை அடைக்காமல் வந்து விட்டாள். அண்டை வீட்டாரிடம் இரவல் வாங்கி வந்த அவ்வழகிய பாத்திரத்தை எவ்வாறு தன்னால் கொடுக்க இயலும் என அவள் மிகுந்த மனத்துயர் அடைந்தாள். அந்தோணியார் இதைக் கண்டு அவள் மீது இரக்கம் கொண்டு எழுந்து சென்று உடைந்த கண்ணாடித் துண்டுகளை எடுத்துச் சேர்த்து அவைகளின் மீது சிலுவை அடையாளமிட்டார். உடனே கூஜா முன்னிருந்த நிலையடைந்தது.

இரசப்பீப்பா அடைக்கப்படாதிருந்த போதிலும், அதலிருந்து ஒரு துளி இரசம் கூட சிந்தி வீணாகவில்லை . அப்பீப்பாவில் பாதி அளவு இரசமே இருந்தது. அதன் பின்னர் பீப்பாய் நிறைய இரசம் காணப்பட்டது. அனைவரும் வியந்தனர். இத்தாலி செல்லும் வழியில் சிசிலித்தீவில் பல மடங்களைக் கட்டினார்.

**ஊனமுற்றவன் குணமடைதல்**

பதுவை துறவியர் மடத்தில் அவர் வாழ்ந்தார். அவரது முதல் பிரசங்கம் பலரைக் கவர்ந்தது. அவரை அங்குள்ள மக்களும் மிகவும் நேசித்தனர். அவரை விட்டுப் பிரிய விருப்பவில்லை. அந்தோணியாரம் எங்கு சென்றாலும் பதுவைக்குத் திரும்பி விடுவார். அவ்வளவு அன்பு அம்மக்கள் மீது அவருக்கு.

பீற்றர் என்ற பதுவைநகர் வாசி, கை கால் இயங்காத தனது நான்கு வயது மகளான பதுவானாவை அந்தோணியாரிடம் எடுத்துச் சென்றான். அந்தோணியார் சிலுவை அடையாளம் வரைந்து செபித்தார். குழந்தை நடந்தது. தந்தை மகிழ்ந்தான்.

“படித்தவனுடைய ஞானத்தை ஓய்வு காலத்தில் அறியலாம்” (சீராக் 38.:.25) தனது ஓய்வு வேளைகளை உல்லாச சல்லாபங்களில் அவர் செலவிடவில்லை. “நீண்ட பேச்சில் பாவம் இராமற் போகாது. தன் உதடுகளை அடக்குகிறவனே பெரிய விவேகி” மோன நிலையில் சர்வேசுரன்டன் பேச 3700 அடி உயரமுள்ள லாவெர்ணா மலைக்கு அடிக்கடி செல்வார். இம்மலையில் தான் அசிசி பிரான்சிஸாருக்கு ஆண்டவரின் சாட்சி கிடைத்தது. தமது மறை உரையை, ““உங்களுக்கு சமாதானம் உண்டாகுக” என்று தொடங்குவார். சமாதானத்தைப் போற்றியே பேசுவார். பலமுறை பேசியதை கேட்ட மக்களிடையே சமாதானம் நிலவுவதாயிற்று.

**நஞ்சு கலந்த உணவை உண்கும் பிழைத்திருந்தது**

“நஞ்சு கலந்த உணவை உண்டு பிழைத்திருந்ததால், தாங்கள் கத்தோலிக்கராவதாக” பதிதர்கள் சிலர் வாக்களித்தனர்.

உங்கள் ஆன்ம ஈடேற்றத்தின் பொருட்டு தேவ அருளால் - இது ஆகும்” என உரைத்து சிலுவை அடையாளம் வரைந்து விஷ உணவை உண்டார். அவர் மடியவில்லை . பதிதரின் துடுக்கு அடங்கியது. கத்தோலிக்கராகி, செய்த பிழையை மன்னித்து விடுமாறு அவரை வேண்டினர்.

“உங்கள் எதிரிகள் எவருமே உங்களை எதிர்த்து நிற்கவோ, மறுத்துப் பேசவோ கூடாதபடி உங்களுக்கு பேச்சுவன்மையும். ஞானமும் அருளுவேன்.““ (லூக்காஸ் 21.∵.15)

**வெட்டிய கூந்தல் முன்போலாகுதல்**

கணவனுக்குப் பயந்த பெண் ஒருத்தி கணவனுக்குத் தெரியாமல் புனிதரின் பிரசங்கத்தை கேட்கச் சென்றாள். அக்கொடியவன் அவளது கூந்தலை அறுத்து விட்டான். அவள் கதறியழுது புனிதரிடம் முறையிட்டாள். இரங்கிய அவர், கூந்தலை முன்போல் வளரச் செய்தார். கொடியவனும் நடந்ததை அறிந்து மனம் மாறினான்.

**கிழிந்த ஆடை சரியாதல்**

இன்னொரு ஏழைப் பெண், மறைஉரை கேட்கச் சென்றாள். வழியில் சறுக்கி விழுந்ததால் ஆடை கிழிந்து கறை பட்டது. வேறு ஆடை வாங்கப் பொருளில்லாத அந்த ஏழை தனது கணவன் திட்டி உதைப்பானே என்ற பயத்தில் அந்தோணியாரிடம் அபயமடைந்தாள். அந்தோணியார் செபம் செய்து ஆடையை முன்போலாக்கினார்.

**மழையில் நனையாத பணியாளர்**

ஒரு நாள் மடத்தில் உணவு இல்லாததால் காய்கறி வாங்கிட ஒரு சீமாட்டியிடம் சென்றார். அவள் உணவுப் பொருட்களை தன் பணியாளரிடம் கொடுத்து அனுப்பினாள்.

யார் கடும் மழை பெய்து கொண்டிருந்த போதிலும் காய்கறி கொண்டு சென்ற பணியாட்கள் நனையவில்லை நடந்ததைக் கேட்டு அறிந்த அவள் தாராள மனத்துடன் அடிக்கடி உதவி செய்து வந்தாள். கொடுப்பதால் நிறைவு அடைகிறோம் என உணர்ந்தாள்.

**பாவங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் மறைதல்**

இத்தகைய இறை வார்த்தைகளால் பற்றியெரிந்த இதயம் கொண்ட அந்தோணியாரிடம் பாவிகள் ஓடோடி வந்ததில் வியப்பில்லை .

ஒரு பாவி தன் பாவங்களை அறிக்கையிட அஞ்சினான் அவற்றை எழுதிக் கொண்டு வருமாறு பணித்தார், அவ்வாறே செய்தான்.

அவன் ஒவ்வொரு பாவத்தையும் படிக்கப் படிக்க அது காகிதத்திலிருந்து மறைந்தது. பச்சாத்தாபத்தின் பெருமையை அறிந்தான். நல்ல பாவசங்கீர்த்தனம் செய்தான். மனமகிழ்ச்சி ஏற்பட்டதோடு தானும் திருந்தியதுடன், மற்றவரையும் நல்ல பாவசங்கீர்த்தனம் செய்யத் தூண்டி வரலானான்.

பாவசங்கீர்த்தனத்தை இக்காலத்தில் பலர் அசட்டை செய்கின்றனர். விசுவாச தளர்வால் பிரிவினைச் சபைகளில் சேர்ந்து திருச்சபையின் படிப்பினைக்கு எதிராக செயல்படுகின்றனர். இவர்கள் மனம் திரும்புவார்களாக.

**தூரத்தில் கேட்ட மறையுரை**

அந்தோணியாரின் பிரசங்கத்தைக் கேட்க ஒரு பெண் விரும்பினாள். - தெய்வ பக்தியற்றவனும் முரடனுமான அவளது கணவன், பிரசங்கம் கேட்க அவள் சென்று வர இசையவில்லை .

மன உறுதியுடனும் விசுவாசத்துடனும் மாடி மீது ஏறினாள். "அன்தோனியாரே உமது பேச்சைக் கேட்க எனக்கு ஆசை. என்ன செய்வது?" என மன்றாடினாள். இரண்டு மைல்களுக்கப்பால் பிரசங்கம் செய்து கொண்டிருந்த அந்தோணியாரின் செவிகளில் அவள் வார்த்தைகள் ஒலித்தன.

என்ன அற்புதம்! அவரது வார்த்தைகள் தெளிவாய் மாடி மீது ஒலித்தன. அவளுக்கு ஒரே ஆச்சரியம். அவள் கணவன் அதை நம்பவில்லை . ஏதோ அவள் உளறுகிறாள் என்று நினைத்து அவளைக் கேலி செய்யும் எண்ணத்துடன் மாடித்தளம் சென்றான். அவனது செவிகளிலும் தெளிவாக அவர் பிரசங்கம் ஒலித்தது.

"மூடனே தன் மனத்தினுள் கடவுள் இல்லை என்று சொல்கிறான்" என்ற வேத வசனத்தை நினைத்தான். மனந்திரும்பினான், அந்தோணியார் பக்தன் ஆனான். தன் கணவனை நல்லவனாக்கியதற்கு அவள் புனிதருக்கு நன்றி செலுத்தி மகிழ்ந்தாள்.

**அலகையை ஓட்டுதல்**

அலகைக்கு இவர் மீது ஆத்திரம். அது விரித்த வலைகளை கிழித்து எறிந்தார். தந்திரங்களை மாய்த்தார். பல ஆன்மாக்களை கரை சேர்த்தார். ஒரு தினம் இவர் தூங்கிக் கொண்டிருந்தபோது பயங்கர உருவத்தில் அவர் படுக்கை அண்டை சாத்தான் வந்தது. அவரது கழுத்தை நெரித்துக் கொல்ல முயன்றது. தயக்கத்துடன் திருச்சிலுவை அடையாளமிட்டு, மரியன்னையின் பெயரை உச்சரித்தார். சாத்தான் நடுங்கி மறைந்தது.

கடின தப முயற்சிகள், சலியாத சேவையால் உடல் நலம் குன்றினார். “என்னைப் பலப்படுத்துகிறவரைக் கொண்டு என்னால் எல்லாம் செய்யக்கூடும்” என்று விசுவசித்து சேவையினைத் தொடர்ந்தார். திருத்தொண்டில் இன்பங் கண்டார்.

***அரசன் மகனின் அற்புத விடுதலை***

அந்தோணியார் வாழ்ந்த நாளில் எல்ஸினோ என்ற சர்வாதிகாரி இருந்தான். அவன் ஜெர்மனி நாட்டைச் சார்ந்தவன். வெரோனோ, பதுவை என்ற நகரங்கள் அவனது ஆட்சியின் கீழ் இருந்தன. பாப்பிறைகளின் கட்டளைகளைக் காற்றில் பறக்க விட்டு கொடுங்கோல் ஆட்சி செய்தான். மக்கள் அவனுக்கு எதிராகக் கொதித்து எழுந்தனர். ஒரே நாளில் 12,000 பதுவை மக்களைக் கொன்று குவித்தான். வெரோனாவிலும் மற்றும் எங்கும் மக்களின் புலம்பல் கேட்டது. போர் வீரர்கள்

எஸ்ஸாலினோ என்பவன், பேரரசனின் மருமகன். இவன் ரிக்காந்தோ என்ற இளைஞனை கடத்திச் சென்றான். அந்தோணியாரின் நண்பரான காஸில் பாண்ட் பட்டணத் தளபதியின் பேரன்தான் ரிக்காந்தோ. தன் விருப்பப்படி நடக்காவிட்டால் வாலிபனைக் கொன்று விடுவதாக அச்சுறுத்தினான். மக்கள் பயந்து அந்தோணியாரிடம் சென்று முறையிட்டனர். அவரும் தீயவனைப் பார்க்கச் சென்று சிறுவனை விடுதலைச் செய்யச் சொன்னார். மறுத்தான். கொடுங்கோலா! நீ விரைவில் தண்டிக்கப்படுவாய், உருவிய வாள் உன் தலைமேல் தொங்குகிறது” என்றார். அவர் கண்களில் கனல் வீசியது. முகத்தில் ஒளி வீசியது. எஸ்ஸாலினோ பயந்து, வாலிபனை விடுதலை செய்தான்.

அவருக்கு விலையுயர்ந்த பரிசுகளைப் பணியாளரிடம் கொடுத்து அனுப்பினான். அவர் அவைகளை ஏற்றுக் கொண்டால் உலகப் பொருளை விரும்பும் கபடத் துறவி என பறைசாற்றிக் கொன்று வாருங்கள் என ஆணையிட்டான்.

அவர் அவைகளை ஏற்றுக்கொள்ளவில்லை “பரலோக மட்டும் அபயமிடும் ஏழைகளிடமிருந்து கவரப்பெற்ற பொருட்கள் எனக்குத் தேவையில்லை. அதை அவர்களுக்குத் திரும்பக் கொடுப்பதுதான் எனக்கு அளிக்கும் பரிசு” என கண்டித்துரைத்து அவர்களைத் துரத்தி விட்டார்.

1259ல் இவ்வரசன் லம்பார்டி இளவரசனால் கொலை செய்யப்பட்ட போது நாடே மகிழ்வால் ஆர்ப்பரித்தது.

**நசுங்கிய கொடிகள் மீண்டும் எழல்**

பதுவை மாநகரிலுள்ள மரியன்னை மடத்தில் வாழ்ந்து, தனது எழுத்துப் பணியை தொடரலானார். வேளாவேளைகளில் மறைஉரை மடத்திலிருந்து செய்து வருவார். அதை விரும்பிக் கேட்டிட மக்கள் கூட்டம் மடம் நோக்கி வந்த வண்ணம் இருந்தது. அவர்களால் மிதிக்கப்பட்ட செடி கொடிகள் நசுங்கின. ஏனெனில் மிகவும் சிரமத்துடன் இவை துறவிகளால் வளர்க்கப்பட்டவை, எழில் மிக்கவை.

அந்தோணியார் அருளால் மாய்ந்த செடி கொடிகள் மீண்டும் பழைய நிலையில் தோன்றியது. அந்தோணியாரது வாழ்க்கை நெறிப்படி வாழ விரும்புவோர் வாழ்வதற்கு, ஒரு தவமடத்தையும் அமைத்துக் கொண்டார்.

# 27. அந்தோணியார் வாழ்வின் இறுதி வேளை

அந்தோணியார் வந்த சேதியினை அறிந்த மக்கள் அவர் வாழ்ந்த மரத்தின் முன், தினமும் திரளாய்க் கூடினர். மரக்குடிலில் இருந்தே அவர்களுக்குப் போதித்தார். ஒவ்வொரு நாளும் மரக்குடிசையை விட்டு இறங்கி ஏனைய துறவிகளுடன் உணவருந்துவார்.

1231 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 13ஆம் நாள் வெள்ளியன்று மடத்தில் மதிய உணவு மணி அடித்தது. குடிலில் இருந்து உணவு அருந்தச் சென்ற அவர் உணவு அறையில் பலவீனத்தால் தள்ளாடி ச்சையானார். உடன் துறவிகள் அவரை பக்கத்து அறையில் படுக்க வைத்தனர்.

சுயநினைவு வந்ததுடன், ரோஜர் சகோதரரிடம் "நான் இங்குள்ள சகோதரர்களுக்குப் பாரமாக இருக்க விரும்பவில்லை பதுவை தூய மரியன்னை மடம் செல்ல விரும்புகிறேன்" என்றார். சகோதரர்கள் உடன்படவில்லை. அவரின் அடுத்தடுத்த விண்ணப்பம் அவர்களை உடன்பட வைத்தது. ஒரு வண்டியில் ஏற்றி பதுவாபுரி நோக்கி விரைந்தனர்.

மிகவும் பிணியுற்ற அவரைக் கொண்டு வந்தவர்கள் ஆர்செல்லா நகரை அடைந்தனர். செல்லும் வழியில் அந்தோணியாரின் நெருங்கிய நண்பரான வின்னோற்னோ துறவியார் அந்தோனியாரைப் பார்க்க வந்து கொண்டிருந்தார். வண்டியை நிறுத்தினார். அவரின் மரண வேளை நெருங்கியதை அறிந்தார்.

பயணத்தால் மேலும் அவரை தொந்தரவு செய்யாது கிளாரம்மாள் கன்னியர் மடம் அருகிலுள்ள ஆர்செல்லா நகருக்கு அவரைக் கொண்டு செல்வதே நல்லது என்று ஆலோசனை கூறினார். தூயவரின் பலவீன நிலையையும் பதுவையின் சந்தடியையும் சுட்டிக்காட்டி, அவர் ஓய்வு பெற அமைதியான சூழ்நிலையுள்ள ஆர் செல்லாவே ஏற்றது என புனிதரிடம் உரைத்தனர். அவரும் இசைந்தார்.

ஆர்செல்லா பட்டணத்தில் ஒரு சிறிய ஆசிரமமும், அதன் அருகில் புனித கிளாரம்மாள் மடமும் இருந்தது. ஆர்செல்லா மடம் புகுந்ததும், மீண்டும் பிணி அவரை வன்மையாகத் தாக்கியது. பலம் அனைத்தும் இழந்தவராகக் காணப்பட்ட அவர் சிறிது நலமுற்றதும் பாவசங்கீர்த்தனம் செய்து நற்கருணை அருந்தினார்.

அந்தோணியார் மரணமடைவதற்கு சற்று முன்னர் தனது நண்பரான தோமஸ் மடாதிபதிக்கு காட்சி தந்தார். இம்மடாதிபதி தொண்டை நோயால் அவதியுற்றார். "உங்களிடம் பிரியா விடை பெற வந்துள்ளேன்.

கழுதையை ஆர்செல்லாவில் விட்டுவிட்டு தந்தையின் நாட்டிற்குப் போகிறேன்" என அவரிடம் சொன்னார். பின் அவரது தொண்டையைத் தொட்டு நோயை அகற்றினார். பின் காட்சி மறைந்தது. அந்தோணியார் ஒரு வேளை தன் தாய் நாடான போர்ச்சுக்கல் போகலாம் என அவர் நினைத்தார்.

பல தினங்களுக்குப் பின் அத்துறவி அந்தோணியார் இறந்ததை அறிந்தார். அந்தோணியார். "கழுதை" என்று குறிப்பிட்டது - தம் உடலையே என அறிந்து கொண்டார். அசிசியார் இறக்கும் முன் அசிசி நகரை ஆசீர்வதித்தார். அந்தோணியாரம் அவ்வாறே பதுவையை ஆசீர்வதித்து "உனது இடத்தின் அழகிற்காய் நீ ஆசீர் பெறுவாயாக, உனது செழிப்பிற்காய் ஆசி பெறுவாய். உனக்காக பரம் வைத்திருக்கும் மகிமையான மகுடத்திற்காய் நீ ஆசீர்வதிக்கப்படுவாயாக" என்றார்.

அவர் ஆன்மா ஆனந்தத்தில் திளைத்தது. நோயை மறந்தார். தன் தாயார் தனக்குக் கற்றுத் தந்த, தன் வாழ்நாள் முழுவதும் பாடிவந்த தேவதாயின் "ஓ! மகிமை பொருந்திய ஆண்டவளே!" என்ற பாடலைப் பாடினார். இதன் பின் வானத்தையே அண்ணார்ந்து பார்த்த வண்ணமிருந்தார். அருகிலிருந்த சகோதரர் "எதைப் பார்க்கிறீர்?" என வினாவினார் "என் ஆண்டவரைக் காண்கிறேன்" என்று பதில் வந்தது.

பின் அவருக்கு அவஸ்தை பூசுதல் கொடுக்கப்பட்டது. தாவீதரசரின் தவச் சங்கீதங்களை அவர் செபித்தார். உடன் துறவிகளும் உருக்கமாய் அவருடன் செபித்தனர். எவ்வளவு இனிய சூழ்நிலை! மரணத்தை இவ்வளவு திடமாய், மகிழ்வாய், அமைதியாய் ஏற்றுக்கொள்வது எவ்வளவு சிறந்தது!

அரைமணி நேர மௌனம் : பின் அவரின் ஆவி அமைதியுடன் இறையடி சேர்ந்தது.

இது 1231 - ஆம் வருடம் ஜூன் திங்கள் 13 - ஆம் நாள் நிகழ்ந்த து. அன்று அவருக்கு வயது 36.

முப்பத்தாறு ஆண்டில் பெற்றோருடன் வாழ்ந்தது 15 ஆண்டுகள்: லிஸ்பன் மடத்தில் 2 ஆண்டுகள்: கோயிம்பிரா, அகஸ்தினார் மடத்தில் 9 ஆண்டுகள்: - பிரான்சீஸார் சபையில் 10 ஆண்டுகள்.

**மரணத்தை சிறுவர் வெளியிடுதல்**

அந்தோணியார் மக்களால் பெரிதும் போற்றப்பட்டதனால் ஜனத்திரள் கடல் அலைபோல் பொங்கிவரும் எனத்துறவிகள் கருதி அவரை ஆடம்பரமின்றி இரகசியமாய் ஆர்செல்லாவில் அடக்கஞ்செய்து விடவேண்டும் எல்லாம் முடிந்த

பின்னர் இதனை வெளியிட்டால் போதும் என்றும் முடிவு செய்தனர். ஆனால் சர்வேசுரன் தனக்காய் முற்றிலும் தன்னை அர்ப்பணித்து வாழ்ந்த திருமகனை, தம் திருவடிகளில் சேர்ந்த தனது அடியானை மகிமைப்படுத்த திருவுளமாகி பதுவை நகரச் சிறுவர்களின் வாய்களைத் திறந்தார்,

அவர்கள் வீதிகளில் அங்குமிங்கும் ஓடி, "தூய பிதா இறந்தார். அந்தோணியார் இறந்துவிட்டார் !" எனச் சொல்லித் திரும்பினர்.

பதுவை ஆலயமணிகளும், லிஸ்பன் ஆலயமணிகளும் ஒலித்தன. பாலகர்களின் வாய்மொழியைக் கேட்ட மக்கள் தங்கள் வேலைகளை அப்படியே போட்டுவிட்டு அதிர்ச்சியுடனும், தாங்க இயலாத மன வருத்தத்துடனும் ஆர்செல்லா சென்றனர்,

**உடலுக்காக உரிமைச் சண்டை**

புனிதரது உடலைக் கண்ட மக்கள் துக்கம் பீறிட கதறி அழுதனர்.

ஆர்செல்லா மக்களும், காப்பேதே போந்தே வாசிகளும் அந்தோணியாரது உடலை தம் ஊரிலேயே அடக்கம் செய்யவேண்டு மென்று அடம் பிடித்தனர். தான் இறந்தபின் தன்னைப் பதுவை மடத்துக் கல்லறைத் தோட்டத்தில் அடக்கஞ் செய்ய வேண்டுமென்று அந்தோணியார் கூறி இருந்தார்.

புனிதரின் விருப்பப்படி பதுவைக்கு அனுப்புவதே சரி என துறவிகள் கூறினர். பதுவை ஆசிரமத் துறவிகளும் இதற்கென வந்து விட்டனர். பலத்த சண்டை கிளம்பியது.

கிளாரா மடத்துக் கன்னியர்கள் ஆர்செல்லா நகர மக்களுக்கு ஆதரவு அளித்தனர். பதுவை ஆயர் ஜேக்கப் கொராடோ இதை முடிவுகட்டும் நடுவராக செயல்பட்டார். அந்தோணியார் விருப்பப்படி பதுவைக்கே எடுத்துச் செல்லப்பட வேண்டும் என ஆயர் அறிவித்தார். பலர் ஆயரையும் எதிர்த்தனர்.

உடல் கொண்டு செல்ல இருந்த பாலத்தை சுற்றி வளைத்தனர். தற்காலிகப் பாலம் ஒன்று அமைக்கப்பட்டது, அதனையும் உடைத்தனர். எதிர்த்த ஆர்செல்லா மக்களுடன் இது பற்றிப் பேச ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. அவர்கள் கூட்டத்தில் இது பற்றி விவாதித்துக்கொண்டு இருக்கையில் அவர்களுக்குத் தெரியாமல் இரகசியமாக உடல் எடுத்துச் செல்லப்பட்டது.

**நல்லடக்கம்**

ஜூன் மாதம் 17ம் நாள் நல்லடக்கத்துக்காக ஊர்வலமாக எடுத்துச் சென்ற புனிதரின் உடலின் முன் மக்கள் எரியும் திரி ஏந்திச் சென்றனர். துறவிகளின் ஆலயத்தில் ஆயர் திருப்பலி நிறைவேற்றிய பின் அடக்கம் நடைபெற்றது.

அந்தோணியார் பிரேதப் பெட்டியைத் தொட்ட பலர் குணமடைந்தனர். ஊமைகள் பேசினர். செவிடர்கள் கேட்டனர். குருடர்கள் பார்வையடைந்தனர். தீராப் பிணிகள் தீர்ந்தன. கேட்டவரங்களை மக்கள் அடைந்தார்கள். அவரின் அடக்க நாளில் இவ்வாறு பல புதுமைகள் நடந்தன.

அவரது நண்பரான லூக்காஸ் என்பவருக்கு அந்தோணியார் காட்சி அளித்தார். எல்ஸினோவின் கொடுங்கோன்மையிலிருந்து பதுவை விடுதலை பெறும் என அப்பொழுது அறிவித்தார்.

அந்தோணியாரின் உடல் அடக்கம் செய்யப்பட்ட ஆலயத்தை 1232-ல் மாபெரும் ஆலயமாக கட்டும் பணி தொடங்கப்பட்டது. (இப் பேராலயம் கட்டி முடித்திட 100 ஆண்டுகள் ஆயிற்று) அந்தோணியாரின் முதல் அடக்கத்தின் போது பயன்படுத்தப்பட்ட பெட்டியினை இங்கு காணலாம்.

# 28. மரணத்திற்குப் பின் மகிமை

"நற்செய்தியை அறிவிக்கவும் சமாதானத்தை தெரிவிக்கவும் மீட்பைத் தெரிவிக்கவும் வருகிறவ ருடைய மலரடிகள் எத்துணை அழகாய் இருக்கின்றன." (இசை.52∴7)

**புனிதர் பட்டம் பெறுதல்**

அந்தோணியார் மறைந்த பின் அவரை மக்கள் புனிதர் என்றும் கருதி விட்டனர். அவரது கல்லறைக்குச் செல்லும் கூட்டத்தைக் கட்டுப்படுத்த இயலவில்லை . நகரத்தின் பிரபுக்களும், போர் வீரர்களும், மாணவர்களும் அணி அணியாய் வந்தனர். அவர்கள் கொண்டு வந்த திரிகள் மிகப்பெரிதாக இருந்தன. அவற்றைத் தூக்கிவர பதினாறுபேர் தேவைபட்டனர்.

பல புதுமைகள் நடந்தேறியமையால் காப்பேதே போந்தே மக்கள் அந்தோணியார் உடலிற்காகத் தாங்கள் செய்த கலகம் பெரும் தவறு என எண்ணி மனம் வருந்தினர். வெறுங்காலுடன் சங்கீதங்களை பாடி, குருக்களுடனும் திரிகளுடனும் அவரது கல்லறைக்குச் சென்று அதனைத் தரிசித்து பாவப்பரிகாரஞ் செய்தனர். பதுவை ஆயரும், பிரபுக்களும், தலைவர்களும் அந்தோணியார் இறந்த ஒரு மாதத்திற்குள் அவருக்குப் புனிதர் பட்டமளித்திட வேண்டுமென பாப்பிறைக்கு விண்ணப் பித்தனர்.

பாப்பிறை 9-வது கிரகோரியார் தூயவர் மீது பற்றுடையவர். அவரை நன்கு அறிந்தவர் - நண்பர். அவர் ஆய்வுக்குழு ஒன்றினை அமைத்தார். புனித ஆசீர்வாதப்பர்சபை, அகஸ்தீனார்சபை மடாதிபதிகள், பதுவை ஆயர் என்போரைக் கொண்ட ஒரு குழுவை பாப்பிறை நியமித்தார். அவர்களும் அந்தோனியாரைப் பற்றிய அறிக்கையினைத் தயாரித்து விரைவில் அனுப்பி வைத்தனர். ஒரு சில கருதினால் மார்கள் இவ்வளவு விரைவில் தூயவர் பட்டமளிப்பது சரியன்று என்று திட்டமாய் உரைத்தனர். அவர்களில் முதல்வரான கருதினால் ஒரு தினம் கனவு கண்டார். ஆலயப் அபிஷேகத்திற்கென பாப்பிறையும் கருதினால்மாரும் குழுமியிருந்தனர். பீடத்தின்மேல் புனிதப் பண்டங்கள் இல்லை. பாப்பிறை எங்கே? என்று கேட்டார். அங்கும் இங்கும் தேடினர். ஒரு சவப்பெட்டியைக் கண்டனர். அதைத்திறந்தனர். நறுமணம் வீசியது. அர்ச்சியஷ்ட பண்டமாக உதவியது" இது தான் கனவு. அப்பெட்டியிலிருந்த உடல் அந்தோணியாரடையது என உணர்ந்த கருதினால் தனது போக்கை மாற்றினார். தடங்கலும் நீங்கியது. அவருக்குப் புனிதர் பட்டம் 1232 மே திங்கள் 30 - ஆம் நாள் இஸ்பிரித்து சாந்துவுயானவர் திருநாளன்று

தரப்படுமெனத் தீர்மானிக்கப்பட்டது. ஸ்போலியோவில் இப் பெரும் நிகழ்ச்சியினை நடத்துவது எனவும் முடிவு செய்யப்பட்டது.

குறிக்கப்பட்ட நாள் காலை பாப்பிறை புனிதர் பட்டமளிப் பதற்கான திருவுடைகளை அணிந்து : கருதினால்கள், ஆயர்கள். மறையவர்கள் புடை சூழ ஸ்போலியோ பேராலயம் வந்தனர்.

தூயவரின் பக்தி, புதுமைகள் அனைத்தும் எடுத்துச் சொல்லப் பட்டன. மட்டற்ற மகிழ்வுடன் தூய பிதா தம் இருக்கையிருந்து எழுந்து, கரங்களை வானகத்தை நோக்கி உயர்த்தி, அந்தோணியார் தூயவர் எனப் பிரகடனஞ் செய்து, அர்ச்சியஷ்ட பட்டமளித்தார். உடனே “தேதேயும்” என்ற தூய அமிர்தநாதரின் நன்றியறிதல் கீதத்தைத் தொடங்கினார்.

மணிகள் ஒலித்தன. ஆலயமனைத்தும் மங்கள இசை வானை மூட்டியது.

மெய்சிலிர்த்தது மக்களுக்கு, மறைந்த ஒரு வருடத்திற்குள் புனிதர் என்ற பட்டத்தைப் பெறும் மாபெரும் பேற்றினை அந்தோணியார் பெற்று விட்டார்.

ஈன்ற பொழுதிலும் பெரிதும் உவந்த பெற்றோர் “நீதிமானின் தந்தை மிகுதியாக அகமகிழ்கிறான். ஞானியைப் பெற்றவன் அவனைப் பற்றி மகிழ்கிறான். உன் தந்தையும், தாயும் மகிழ்வார்களாக”.

அந்தோணியாரின் தந்தையான மார்த்தீன் பிரபுவும், தாய் மரியும் தூயவர் பட்டமளிப்புச் சடங்கில் கலந்திடும் மாபெரும் பாக்கியத்தைப் பெற்றனர்.

அவர்களின் மகிழ்ச்சியினை அளவிட இயலுமா? தம் மகனை நோக்கி வேண்டினர்.

பாப்பிறைக்குப் பேரானந்தம் தாங்க முடியவில்லை. ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

நன்றியறிதல் பாடல் முடிந்ததும் தேவ ஏவுதலால் “ஓ பெரும் மறை மேதையே...” என்ற திருவார்த்தைகளைப் பாடினார்.

“ஓ! மகா! மறை இயல் மேதையே! திருமறையின் விளக்கே! தூய அந்தோனியாரே! சர்வேசுரனின் சட்டங்களை விரும்பியவரே! சர்வேசுரனின் திருமகனிடம் எங்களுக்காய்ப் பரிந்து பேசுபவராய் இரும்” என வேண்டினார்.

தூயவரின் தாய் தந்தையரை பாப்பிறையும் மக்களும் கண்டு ஆனந்தமடைந்தனர்.

பாப்பரசர், இதற்குச் சில தினங்களுக்குப் பின்னர் அந்தோணியார் "உலகமனைத்திற்குமான புனிதர்" எனவும் இவர் திருநாளை திருச்சபை அவர் இறந்த ஜூன் திங்கள் 13 - ஆம் நாள் கொண்டாட வேண்டுமெனவும் பிரகடனஞ் செய்தார். கோடி அற்புதர் உலகின் கோடானு கோடி மக்களின் புனிதரானார்.

பாப்பிறை 9-ம் கிரகோரியாரின் ஆணை மதிப்பிற்குரிய சகோதரர்களுக்கு நலமும், அப்போஸ்தலிக்க ஆசீரும். "நமது ஆண்டவர் தீர்க்கதரிசி வழியாய், புகழ், வாழ்த்து, மகிமையாய் உன்னை எல்லா மக்களுக்கும் அளிப்பேன். அவர் வழியாக நீதிமான் சூரியனைப் போல சர்வேசுரனின் திருமுன் ஒளிர்வான். தங்களது தகுதியாலும், தூய்மையாலும் சர்வேசுரனால் முடிசூட்டப்படுபவர்கள் மீது நாமும் நமது செபத்தாலும் வணக்கத்தாலும் புகழ் செலுத்துவது நீதியாகும். தமது தூயவர்களுடன் நித்தியத்திற்கும் புகழப்படுவரையே நாம் அவர்கள் வழியாகப் புகழ்கின்றோம். தன மகத்துவத்தையும், கருணையுடன் அவர்கள் வழியாய் நமது ஈடேற்றத்திற்காக அளித்த பல அடையாளங்களாலும் புதுமைகளாலும் பேசுகத்தை நசுக்கி திருச்சபையை மகிமைப்படுத்த திருவுளமானார். விசுவாசிகள் இன்னமும் அதிக ஆர்வமுடனும் நற்செயல்கள் புரியவும் தாங்கள் நடக்கும் இருளிலும் குருட்டாட்டத்திலிருந்தும் விடுதலை பெற்று சரியான பாதையை அடையவும், ஒளியும் வழியும் உண்மையுமான கிறிஸ்துவை யூதர்களும் அஞ்ஞானிகளும் முதலாய் அறியவும் இவர்கள் தரப்பட்டுள்ளனர்.""

ஆகையால் பிரியமான பிள்ளைகளே! எல்லா அருள்கொடைக ளையும் தருபவருக்கு நன்றி கூறுவோமாக. நமது நாட்களில் கத்தோலிக்க நெறிகளில் உறுதிப்படுத்தவும், பேதகங்களைத் தகர்த்திடவும் புதிய அடையாளங்களைச் செய்து இவ்வுலகில், கத்தோலிக்க விசுவாசத்தை தங்கள் முழு இருதய சேவையாலும், சொல்லாலும் தூய செயலாலும், நிலை நிறுத்திடவும், தமது வல்லமையை மீண்டும் ஒரு முறை (அவர்களுக்கு) அளித்திடச் சித்தமானார். இவர்களில் ஒருவர்தான் முத்திப் பேறுபெற்ற , நினைவில் கொண்டிடத்தக்க பிரான்சீஸ் சபை தூய அந்தோனியர்.

உலகில் அவர் வாழ்ந்தபோது பல நல்லியல்புகளைப் பெற்றிருந்தார், பரத்தில் அவரது பல புதுமைகளால் மகிமைப்படுத்தப் படுகின்றார். இவ்வித உறுதியான அடையாளங்களால் அவரது தூய்மை வெளிப்படுத்தப்படுகின்றது.

"திருச்சபையில் இறுதி பரிந்தம் சர்வேசுரன்டன் நிலைநிற்பது போதுமெனின் இறுதிவரை உண்மை உள்ளவனாயிரு : உனக்கு வாழ்வின் முடிவைத் தருவேன்" - என்று போராடும் திருச்சபையில் தூயவரென ஒருவர் ஒப்புக்கொள்ளப்படுவதற்கு இரு காரியங்கள் தேவையாகின்றது.

அவை மேலான புண்ணியமும், புதுமைகளுமாம். இவை இரண்டும் ஒன்றிற்கொன்று ஒப்புரவாக வேண்டும்.

புண்ணியமில்லா புதுமையையும், புதுமையில்லா புண்ணியமும் தூயவரென நிரூபணமாவதற்கு முழுச் சான்றுகளாகாது.

உண்மையான நல்லியல்புடன் திட்டமான புதுமைகளும் முன்காணப்பட்டால், தூய்மையான உண்மையான அடையாளத்தை நாம் பெறுகின்றோம். அந்த நல்லியல்புகளால், அவரை கனம்பண்ணும் படியாக நாம் சர்வேசுரன்னால் தூண்டப்படுகின்றோம்.

இவ்வுலக வாழ்விற்குப் பின் இயேசுவிடம் வாழ்ந்திட அவர் தகுதியுடையவரானார். சர்வேசுரன் இவ்வாறு மகிமைப்படுத்திய அவரை மனிதர்களும் வணங்குவதென்ன?

விளக்கைக் கொழுத்தி மரக்காலால் மறைத்து வைப்பவனுண்டோ ? என்ற வேதவாக்கு , அதனை விளக்குத் தண்டின் மேல் வைத்து வீடு முழுவதும் ஒளியைப் பரப்புவான் என்கிறது.

புனிதர் பட்டியலில் சேர்க்கப்பட்ட அந்தோணியாரம் சுடர் வீசும் விளக்காக ஒளிர்ந்தார். எனவே விசுவாசிகள் தங்கள் இரட்சிப்பிற்காக அவரை மகிமைப்படுத்தவும், சர்வேசுரன் அவரது செபத்தால் கவரப்பட்டு இவ்வுலக வாழ்வில் நமக்கு அருளையும், மறு உலக வாழ்வில் மகிமையையும் தர அவர் திருநாளை ஆண்டு தோறும் ஜுன் திங்கள் 13 - ஆம் நாள் கொண்டாட வேண்டும் என்று இந்த எழுத்தின் மூலம் பணிக்கின்றோம் - வேண்டுகின்றோம்.

தமது புதுமைகளால் திருச்சபையில் பேரொளியை ஏற்றும் இவரது கல்லறையை தரிசித்து மரியாதை செய்ய வேண்டுமெனவும் விரும்புகின்றோம். சர்வேசுரன் மீதுள்ள நம்பிக்கையாலும், தூய அப்போஸ்தலர்களான இராயப்பர் சின்னப்பர் அதிகாரத்தாலும் அதனை அவர் திருநாளிலோ அதன் இடைவேளையிலோ சந்தித்து மனம் வருந்தி நல்ல பாவசங்கீர்த்தனம் செய்தவர்களுக்கு ஒரு வருடப் பலனை அருளுகின்றோம்.

ஸ்போலியோவில் ஜுன் திங்கள் 11ம் ஆம் நாள் நமது ஆட்சியில் ஆறாவது ஆண்டு தரப்பட்டது.

***மணிகள் தாமாக ஒலித்தல்***

அந்தோணியார் புனிதர் என பிரகடனஞ் செய்யப்பட்டவுடன், லிஸ்பன் ஆலயமணிகள் தாமாகவே அடித்தன. அவரது சொந்த ஊர், தங்கள் ஊரில் ஒரு மாபெரும் தூயவர் தோன்றியதற்காக சர்வேசுரனுக்கு அஞ்சலி செலுத்தியது.

1263ல் பதுவை சட்டசபை உறுப்பினர்கள், புதிதாக கட்டப்பட்டு வரும் பேராலயத்திற்கு அவர் உடல் எடுத்துச் செல்லப்பட வேண்டும் என முடிவு செய்தனர். பதுவை மக்களின் ஆர்வத்தாலும் தாராள பொருள் உதவியாலும் பைஸாந்திய கோதிக் பாணியில் பிரமாண்டமான ஆலயம் கட்டி முடிக்கப்பட்டது. இது பதுவையில் கம்பீரமாக அமைந்துள்ளது.

# 29. அந்தோணியார் பக்தி

புனிதரின் திருத்தலங்களுக்குச் சென்று பாவக்கறைகளை நீக்கிடாமல் வேண்டுதல் செலுத்துவது அந்தோணியார் பக்தி அல்ல. இறை இயேசு நமது மீட்பர் எனக்கண்டு, தூயவர் வழியாக அவரை வேண்டி நலம் பெறுதலே உண்மை பக்தி .

இன்று நடப்பது என்ன? உதட்டில் விண்ணப்பம் உள்ளத்தில் பகை உணர்ச்சி, பேராசை.

ஆசைப்பட்டு கேட்கும் பொருட்களை புனிதர் தருவார் என்ற முட்டள்தனமான நம்பிக்கை பலரிடம் உள்ளது. அவரோ தம் வாழ்நாளில் தன்னிடம் உள்ளதெல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்தார். ஏழைகளுக்கு உதவுவதன் மூலம் அவரது அன்பைப் பெறலாம்.

அவரது உண்மை பக்தர்கள் தாழ்ச்சி, பக்தி, கற்பு போன்ற நற்பண்புகளைப் பேணவேண்டும். இதுவே நாம் அவருக்குச் செலுத்தும் புகழாகும்.

**ஒன்பது செவ்வாய்க்கிழமை பக்தி**

ஒன்பது செவ்வாய்க்கிழமை கோடி அற்புதரின் ஆலயஞ்சென்று வேண்டினால் கேட்ட வரம் அருள்வார் புனிதர்.

இத்தாலியா நாட்டு பொலோனியா பட்டணத்தில் இருபத்தி இரண்டு ஆண்டுகள் மகப்பேறு இல்லாத பெண் ஒருத்தி இருந்தாள். 1674 - ஆம் ஆண்டு அவள் அந்தோணியார் ஆலயஞ்சென்று அவரை மன்றாடினாள். அன்று இரவு புனிதர் அவளுக்குத் தோன்றி “நமது ஆலயமொன்றிற்கு தொடர்ந்து ஒன்பது செவ்வாய்க்கிழமை சென்று வேண்டினால் கேட்டவரம் கிடைக்கும்” என்று சொல்லி மறைந்தார். அவளும் அவ்வாறு மகப்பேறுபெற்றாள். இப்புதுமையும், பக்தியும் உலகமெங்கும் பரவியது.

**செவ்வாய் அல்லது ஞாயிறு பக்தி**

அந்தோணியார் படத்தின் முன் அல்லது சுரூபத்தின் முன் 13 செவ்வாய் அல்லது ஞாயிற்றுக்கிழமைகளில் தொடர்ந்து வேண்டிவந்தால் நினைத்தது கைகூடும். இந்த நாட்களில் நற்கிரிகைகள், செபம் முதலியன - செய்வோருக்கு ஒவ்வொரு நாளும் ஒரு பரிபூரண பலன் உண்டு.

“சத்தியத்தில் நடந்து அவரை மகிழ்விப்பதே அவரது பக்தர்களின் கடமை .

# 30. அழிவுறா மறையுரைகள்

பதுவைப்பதியர் கோடி அற்புதர் தம் மறை உரைகளை பாப்பிறை கட்டளைக்குப் பணிந்தும் ஒஸ்தியா ஆயரின் விருப்பிற்கேற்பவும் மேலாளரின் ஆணைக்கு இசைந்தும் எழுதிவைத்தார். அவைகள் காலத்தால் அழிவுறாதவை. அவற்றுள் சில வருமாறு:

**தூயவர்களைப் பற்றி**

அழுத குழந்தை தாயிடம் ஓடிவரும் பொழுது அதன் கண்ணீரைத் துடைத்து அவள் அதனைத் தேற்றுகின்றாள்.

இவ்வுலகத் துன்பங்களிலிருந்து சர்வேசுரனின் கரத்தினை அடைய விரைகின்றனர். தூயவர் ஒவ்வொருவர் முகத்திலுள்ள கண்ணீரையும் சர்வ வல்லப கடவுள் துடைத்து விடுகின்றார்.

இதோ, இதுதான் துயரங்களின் முடிவு, நமது வழியின் இலட்சியம். தேடுவோருக்கு மகிழ்வு: நாடுகின்றவருக்கு பரிசு நமது எண்ணங்கள் அனைத்தையும் நித்திய நிறைவு அமைதியாக்குகின்றது.

ஒவ்வொரு தூயவரும் மற்றொரு தூயவரின் மகிமையில் அக்களிக்கிறார். அவ்வன்பு அவரிலிருந்து வழிந்தோடுகின்றது. மாதுளம் பழத்தைப் பாருங்கள். அதன் விதைகள் அனைத்தும் ஒரு தோலால் மூடப்பட்டிருக்கும். எனினும் ஒவ்வொன்றிற்கும் தனி அறை உண்டு. இதேபோன்று நித்திய பரலோகத்தில் தூயவர்கள் ஒருங்கிணைந்து வாழ்ந்தாலும், ஆதவனைப் போலவும் நிலவைப் போலவும் விண் மீன்களைப் போலவும் தகுதிக்கேற்ப மகிமையில் வேறுபட்டு இருப்பர். இந்த வேறுபாடு இருப்பினும் ஒரே மகிழ்வு அனைவரிடமும் இருக்கும்.

உங்கள் நல்வாழ்வு எனது நல்வாழ்வென நான் அகமகிழ்வேன். நீங்களும் எனது நல்வாழ்வு உங்கள் நல்வாழ்வென மகிழவேண்டும். உதாரணமாக என் கையில் ஒரு ரோசா மலர் உள்ளது. ரோசா என்னுடைய தெனினும் நீங்களும் நானும் அதைப் பொருட்படுத்துவதில்லை. ஆனால் அதன் அழகையும் நறுமணத்தையும் சுகிக்கின்றோம். இவ்விதமே நித்திய வாழ்வு அமையும்.

**அநியாய வட்டி வாங்குபவர்கள்**

"அநியாய வட்டி வாங்குகின்றவர்கள் உலகில் பலர். அவர்கள் பலுகிப் பெருகி உள்ளனர். அவர்களின் பற்கள் சிங்கங்களின் பற்களைப் போன்றது. சிங்கத்திடம் இரு காரியங்களை நாம் பார்க்கின்றோம். அதன் வளையாத

கழுத்து, கூரிய பற்கள். இதே போன்று அநியாய வட்டி பெறுபவனுடைய கழுத்தும் வளையாது. தெய்வ பயம் இல்லாத அவன் சர்வேசுரன் முன்னோ அல்லது மனிதர் முன்னோ அதனை வளைப்பதில்லை. பணத்தின் அழுக்கையும் தனிவட்டியின் சாணத்தையும் போன்றிருக்கும் அவன் வாய் நாற்றமிக்கது. அவன் பற்கள் ஒரு இளஞ்சிங்கத்தினுடையதைப் போன்றவை, சிங்கம் களவாடி. அடித்து விழுங்குவதைப் போல இவனும் ஏழைகள், விதவைகள். அனாதைகளை விழுங்குகின்றான்".

**குருக்களும் பாவிகளும்**

குஷ்டரோகி ஒருவன் இயேசுவிடம் வந்து "உமக்குச் சித்தமானால் குணப்படுத்தும்" என்றான். கட்டவும் கட்டவிழ்க்கவும் இயேசுவால் அதிகாரம் தரப்பட்ட குருவின் முன் பாவிகளும் இவ்விதமே முழந்தாழ்படி இடவேண்டும். குஷ்டரோகி உடனே தொழுநோயிலிருந்து விடுதலை பெற்றான். ஒவ்வொரு நாளும் குருக்கள் வழியாக பாவிகளுக்கு சர்வேசுரன் இதனையே செய்கின்றார்.

- குருவானவர் மூன்று காரியங்களைச் செய்ய வேண்டும். அவர் தனது கரத்தை நீட்டி தொட்டு குணமாக்க விரும்பவேண்டும். பாவிக்காக பரிவு கொண்டு சர்வேசுரனிடம் மன்றாடும் போது அவர் கரத்தை நீட்டுகின்றார். பாவியை ஆறுதல்படுத்தி, பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்று சொல்லும் பொழுதே அவனைத் தொடுகின்றார். பாவப்பொறுத்தல் ஆசீர் அளிக்கும்போது அவன் குணமாக தான் விரும்புவதை வெளியாக்குகின்றார்.

**பிறர் அறிய தவஞ்செய்ய வேண்டாம்.**

"இதய இரகசியம் நமக்கும், நம்மைச் சூழ்ந்து இருப்பவர்களுக்கும் இடையில் கட்டப்பட்ட திரையைப் போன்றது, திரைக்குப்பின் இருப்பதை அவர்கள் பார்க்கத் தேவையில்லை. அவர்களுக்கு ஒளிதர நாம் கரங்களில் தாங்கியுள்ள ஒளியை அவர்கள் கண்டாற் போதும். ஏனெனில் இயேசு பிரான் ஒருவரே நமது பிரதான ஆசிரியர். எல்லா இதயங்களையும் அதன் ஆழ்ந்த சிந்தனைகளையும் அவர் அறிவர். திரை அதனை மறைக்காது."

தனிமையில் இனிமை படம் "ஒருவன் உலகின் சந்தடியிலிருந்து விடுபட்டு தனிமையான ஒரு இடத்தை நாடி, தன் பாவங்களை நினைத்து கண்ணீரால் தனது பாவங்களுக்கு பிராயச்சித்தம் செய்து, மோட்ச பேரின்பத்தின் மகிமையை தியானித்து வருவானாகில் ஆண்டவர் தம்மை அவனுக்குக் காண்பிப்பார்.""

**பிறரன்பு**

“பாய்மரம் கப்பலை இழுத்துச் செல்வது போல் கருணையும் உன் சகோதரர்களுக்கு உதவி செய்ய இழுத்துச் செல்கின்றது.““

“ஓ. கடின இதயமே! நீ அயலாருக்கு உதவி செய்யச் செல்வ தில்லை - நான் என் சகோதரரின் காவலனா? உன் சகோதரரின் காவலனா?

உன் சகோதரனுக்கு நீ காவலாளியாக இருப்பாயாகில் பெரும் சம்பாவனையை அடைவாய்.”

**தேவ அன்னைக்கு புகழ்மாலை**

“ஓ! (கெருபீம், செராபீம் ) அதிதூதர்களே! உங்கள் பார்வையைத் தாழ்த்தி பயத்துடன் சிரம்பணிந்து இறைமகனின் ஆலயத்தை, இஸ்பிரித்து சாந்துவுயின் அருள் பெட்டகத்தை ஆராதித்து, ஓ ஆதாமின் மக்களே, உங்களுக்கு இந்த அருள்தோணி தரப்பட்டுள்ளது. உம்மைச் சுமந்த வயிறு பாக்கியம் பெற்றது” என ஆர்ப்பரிப்பீர். விசுவாசத்துடனும், பக்தியுடனும், உண்மையான சாலமோன் தந்த சிம்மாசனத்தை இசையாசின் உயர்த்தப்பட்ட அரசபீடத்தை “உம்மை தாங்கியவயிறு பேறு பெற்றது” என்று சொல்லி தெண்டனிட்டு வணங்குவீர்.

**வீண் சந்தேகங்கள்**

பல பொருள் பற்றி கேள்விகள் கேட்டு அறிய வேண்டும் என்ற . ஆசை நம்மில் எழுகின்றது. எல்லாவற்றிற்கும் பதில் உரைக்கும் ஆற்றல் பெற்ற ஞானி யார்? இவையெல்லாம் சோதனைகள். இவைகளை அகற்றுவதே அவற்றிற்கு விடை காண்பதாகும். கடின விஷயங்களை அறிந்திட விரும்புகிறவன், அவற்றின் மிகுதியால் ஏழ்மையில் மூழ்குவான்.

**சர்வேசுரனைப் புகழ்வோம்**

சர்வேசுரனுக்குப் புதுப்பாட்டைப் பாடுவீர். உலக ஞானமனைத்தும் பழைய பாட்டு. மறை இயல் அறிவே புதுப்பாட்டு - அது சர்வேசுரனுக்கு உகந்தது. தன் இனிய தொனியால் ஆன்மாவிற்கு புதுவாழ்வைத் தருகிறது.

திருச்சிலுவை பற்றிய மறை உரை

சர்வேசுரன் மோயீசனிடம் வெண்கலத்தால் ஆன ஒரு பாம்பு செய்து அதனை ஒரு கோலில் வைத்து விடு, பாம்பால் தீண்டப்பட்டவர்கள் அதனைப் பார்த்தால் குணமடைவர் என்றார்.

வெண்கல சர்ப்பம் இறைமகனான இயேசு வெண்கலம் காலத்தால் அழிவு படாதது. அவரின் தெய்வீகத்திற்கு அடையாளம் பாம்பு, திருச்சிலுவை உயர்த்தப்பட்டது அவரது மனித இயல்பிற்கு அடையாளம். நமது இரட்சணியத்திற்கானது.

நமது இரட்சிப்பின் ஏதுவான இயேசுவை உற்றுநோக்குவோம். ஆணிகளால் அறையப்பட்டு அவர் சிலுவையில் தொங்குவதைத் தியானிப்போம். ஆனால் "உங்கள் வாழ்க்கை உங்கள் முன் தொங்கினாலும் அதை நீங்கள் பொருட்படுத்தவில்லை" என மோயீசன் சொன்னது போலாகின்றதே, தன் வாழ்வை விட மனிதனின் மதிப்பென்ன? உடலின் வாழ்வு, கிறிஸ்துவின் வாழ்வு, உங்கள் ஆன்மாவின் வாழ்வு எவ்வாறு தொங்கி இருக்கிறது என்று பாருங்கள். நீங்கள் ஏன் மனத்துயரமோ மனவருத்தமோ அடைவதில்லை! அவர் உண்மையாகவே உங்கள் வாழ்வு. பின் ஏன் அ விட்டகன்று போகின்றீர்கள்? இராயப்பரையும், தோமையாரையும் போல அவருக்காக சிறை செல்லவும், துன்பப்படவும் நீங்கள் விரும்பாதது ஏன்? தன் மீது இரக்கங்கொள்ளவே அவர் உங்கள் முன் சிலுவையில் தொங்குகின்றார்! இவ்வழியாய் செல்கின்றவர் களை உற்றுப்பார்த்து "இதைப்போல் துன்பம் எதுவும் உள்ளதோ? எனச் சொல்வீர் என அவர் கூறுகின்றார்.

அவர்பட்ட பாடுகள் மனுக்குலமனைத்தையும் மீட்டிடவல்லது. ஆனால் எத்தனை எத்தனைபேர் தங்களை அழிவிற்குக் கையளிக்கின்றனர். அதற்கென விரைந்து செல்கின்றனர். இதைத் தவிர அவருக்கு அதிகத் துன்பந்தரும் மற்றேதும் உள்ளதோ? எனினும் இதனை சிந்திப்பார் யாருமில்லை.

"மனுக்குலத்தைப் படைத்ததைப்பற்றி வருந்துகிறேன்"" என்று முன்சொன்ன சர்வேசுரன் "அவர்களை மீட்டதைப்பற்றி வருந்துகிறேன்" என்று சொல்லமாட்டாரா? உங்கள் முகங்கள் முன் முகக்கண்ணாடி போல் நீங்கள் தொங்குகின்றீர்கள், உங்கள் பாவக்கறைகளான காயத்தைக் குணமாக்குவது அவர் சிந்திய திருஇரத்தமென்னும் மருந்து என்பதை அறிவீர்கள். அவை எவ்வளவு கனமானவை, சிலுவை என்ற கண்ணாடியில் தான் ஒருவன் தன் சுயநிலையை அறிந்து கொள்ளமுடியும். உங்கள் பாவங்கள், பழிகள், தீய இச்சை ஆகியவைகளுக்கு பரம பிதாவிடம் மன்னிப்புக் கேட்டு, துயரப்படுவோருக்காய் மன்றாடுவீர்.

உங்கள் மீட்பிற்காக அவர் சிலுவை சுமந்தார் - பலியானார். நீங்கள் சிலுவை சுமந்து அவரைப் பின்செல்கின்றீர்களா? அவரைப் பின் செல்கின்றவன் அதைச் சுமக்க வேண்டுமே!

இழிவான சிலுவை, அவர் மரணத்தால் பழியகன்று மகிமைச் சின்னமானது!

# 31. அந்தோணியார் செய்து வந்த செபங்கள்

“என்னை நோக்கிக் கூப்பிடுவான். அவன் செபத்தைக் கேட்பேன். துன்ப வேளையில் அவனோடு இருப்பேன். அவனைத் தப்புவித்துப் பெருமைப்படுத்துவேன்” (சங்.90.:.15)

**தேவதாய் மீது**

புனித அந்தோணியார் நாள்தோறும் ஆன்ம தூய்மையைக் காப்பாற்ற தேயதாய்க்கு தம்மை முழுவதும் அர்ப்பணித்து அதற்காக பின்வரும் 3 ஜெபங்களைச் சொல்லி 3 அருள்நிறை மரியே... செபித்து வருவார்.

செபத்தின் வல்லமையை அறிந்த அவர், கற்புக்கு விரோதமான சோதனை உள்ளவர்கள் தம்மிடம் ஆலோசனை கேட்க வரும்போது அச்செபத்தையே சொல்லி வர புத்தி சொல்வார்.

செபம்

தேவ பாலனைப் பெறும் முன்னும் கன்னிகையான மரியே! என் ஆத்தும சரீரத் தூய்மையைப் பாதுகாத்தருளும். (ஒரு அருள்)

தேவ பாலனைப் பெறும்போதும் கன்னிகையான மரியே! என் ஆத்தும சரீரத் தூய்மையைப் பாதுகாத்தருளும் (ஒரு அருள்)

தேவ பாலனைப் பெற்றபின்னும் கன்னிகையான மரியே! என் ஆத்தும் சரீரத் தூய்மையைப் பாதுகாத்தருளும். (ஒரு அருள்)

**சர்வேசுரன் மீது**

ஓ! பேரொளியே, மட்டில்லாத சர்வேசுரா! நித்திய பிதாவே, அறிவை அளிப்பவரே! ஆதியில் இருந்து அனைத்தையும் அறிந்தவரே! இருளையும் ஒளியையும் படைத்தவரே! ஞான விவரங்களை சொல்லொண்ணா விதமாய் வழங்கும் தூய வள்ளலே! உமது சத்தியத்தை வெளியிட்டு நிலைநாட்ட, கூரிய வாள்போல் உதவும்படி இவைகளை நடத்தியருளும்.

ஓ ஆண்டவரே! உம் அற்புதங்களை அனைவருக்கும் எடுத்துரைக்க என் நாவை கூரிய அம்புக்கு “ஒத்ததாகச் செய்தருளும்.

ஓ! சர்வேசுரா! உமது சத்தியங்களை என் இதயத்தில் சரியாய் உணரவும், என் மனதில் நன்றாய் நினைக்கவும், ஆன்மாவில் செம்மையாய் தியானிக்கவும் உமது இஸ்பிரித்து சாந்துவுயை வரவிடும்.

நான் பக்தியாயும், தூய்மையாயும், அன்பாயும், இரக்கத்துடனும் - பேச எனக்கு ஆர்வத்தையூட்டும். முதலில் இருந்து இறுதிவரை எனக்கு ஞானத்தைக் கற்பித்து நல்வழிகாட்டி என் சிந்தனை அரண்களைக் காத்தருளும். என்னைத் திருத்தி நடத்த உமது அருள் எனக்கு எவ்வேளையும் வேண்டும். உமது கறையில்லாக் கருணையால் இப்போது பரலோக ஞானம் தந்து என்னைப் பலப்படுத்தும். (இச்செபத்தை அந்தோணியார் ஒவ்வோரு மறையுரை செய்யும் முன்னும் செபித்தார். இதன் கையெழுத்துப் பிரதி இன்று வரை பதுவாபுரியில் உள்ளது)

புனிதரது தாயார் பாடிய தாலாட்டு

இப்பாடலை புனிதர் இறப்பதுவரை பாடி வந்தார். ஓ! மகிமை பொருந்திய ஆண்டவளே! எக்காலமும் ஆசீர்வதிக்கப்பட்டவளே!

மனுக்குலத்தில் தோன்றிய சகல பெண் இனத்திலும் மேலானவளே! மாசற்ற அன்னையின் அன்புடன் சர்வேசுரனுக்கு உமது பாலூட்டி வளர்த்தவளே!

ஏவாளின் பாவத்தால் நாங்கள் இழந்து போனவற்றை உம்மிடம் உதிர்ந்த மலர் மீண்டும் அடையச் செய்கின்றது.

துயருறும் ஆன்மாக்களுக்கு பேரின்ப வீட்டை அளிக்க அறத்தின் கதவுகளைத் திறக்கின்றது.

ராஜாதி ராஜன் தோன்றிய வாயிலே! இருளை ஓட்டி ஒளியை வீசிய கூடமே!

தேவரீரின் கன்னிமைகெடாத உதிரத்தில் நின்று பிறந்தவரே : அவரால் சிறை மீட்கப்பட்ட சகல மக்களும் புகழ்ந்து வாழ்த்துகின்றனர்.

கன்னியிடம் பிறந்த இயேசுநாதருக்கு எல்லா மனிதரதும் வான கணங்களதும் வாழ்த்துண்டாவதாக!

பிதாவாகிய சர்வேசுரனுக்கும் இஸ்பிரித்து சாந்துவுக்கும் மகிமை என்றென்றும் சொல்லப்படுவதாக. ஆமென்.

# 32. அழியா நாவும் அற்புதங்களும்

“உம்மிடமிருந்து வரும் உதவியை நினைத்து என் நெஞ்சம் அக்களிப்பதாக....” (சங்.125)

அந்தோணியார் சர்வேசுரன் திருவடி சேர்ந்து 32 ஆண்டுகளுக்குப் பிறகு அவரது கல்லறை திறக்கும் நிகழ்ச்சி 1263-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் நடைபெற்றது. கப்பூச்சின் சபை பெரும் மேலாளர் பெனவெந்தூர் உடன் இருந்தார். அவரது உடல் அழிந்து விட்டது. எலும்புகளே இருந்தன. ஆயினும் அவரது நாக்கு அழியாமல் இருந்தது. இதனைக் கண்ட பெனவெந்தூர் உணர்ச்சி வசப்பட்டடு, “ஓ! ஆசீர்வதிக்கப்பட்ட நாவே! நீ எப்பொழுதும் ஆண்டவரைப் புகழ்ந்தாய்! பிறரையும் புகழச் செய்தாய்! சர்வேசுரனுக்கு முன் நீ பெற்ற பெருந் தகுதியை நாங்கள் இப்பொழுது கண்கூடாகக் காண்கிறோம்” என்றார்.

இப் பெனவெந்தூரும் திருச்சபையின் மறை இயல் மேதை. பின்னர் புனிதர் பட்டம் பெற்றவர்.

இன்றைய இறைவாழ் மக்களுக்கு புனிதரது நாவு பாடம் கற்பிக்கிறது. கோள், புறணி, மற்றவரை கெடுத்துப் பேசுதல், தகாத வார்த்தைகள், பொய்யுரை சர்வேசுரனை இகழ்தல் போன்றவைகளை நம் நாவு செய்து வருகின்றது. துயருற்றவருக்கு நம் நாவு ஆறுதல் சொல்கின்றதா? மற்றவர் மனதை மகிழ்விக்கின்றதா? சர்வேசுரனைப் புகழ்கின்றதா? பல பேரரசுகள் எழ-விழ நாவன்மையே காரணம். நீதி மன்றத்தில் வழக்குரைஞரின் நாவன்மையால் கொலை பாதகன் விடுதலை பெறுகிறான்.

வாழ்க என்பதும் வீழ்க என்பதும் ஒரே நாவு. பொய்யான நாவினால் வருங்கேடு உயர இருந்து கட்டாந் தரையில் விழுகிறவனுக்கு ஒத்தது” (சீராக். 20.்.20) என்றவாறு அவர் தன் நாவைக் கையாண்டார்.

அவரது நாவு இதுவரை அழியவில்லை - பதுவாபுரி பேராலயத்தில் ஒரு அழகிய பேழையில் வைக்கப்பட்டுள்ளது. மீண்டும் 1310-ம் ஆண்டு அந்தோணியாரின் உடல் ஆலய மத்தியில் அடக்கஞ் செய்யப்பட்டது. இறுதியாக உடலை கல்லறைக்கு மாற்றுதல் 1350- ஆம் ஆண்டு பிரான்ஸ் நாட்டு 9ஆம் லூயிஸ் மன்னரின் கொள்ளுப்பேரன் கருதினால் கதோ-டி-மொ நிகழ்ந்தது. அவர் கூஜே : செல்லும் வழியில் கடும் பிணியுற்றார். நலம் பெற்றால் புனிதரது எலும்புகள் மாற்றும் வைபவத்தில் கலந்திடுவதாக வேண்டினார். குணம் கிடைத்தது. எனவே அவரும் இதில் பங்கு கொண்டார்.

ஒரு அழகிய சிற்றாலயம். பேராலயத்தினுள் எழுப்பப்பட்டு, இந்த அருளிக்கப்பெட்டி அதில் மிக மரியாதையுடன் வைக்கப்பட்டது.

வீடு திரும்பும்போது, தனது மறை மாவட்டமான கூஜேவிற்குத் தூயவரின் அருளிக்கம் சிறிதளவு எடுத்துச்சென்றார்.

**மறை மேதை பட்டம்**

“அகமகிழ்வாய் ஆனந்த போர்த்துக்கலே சந்தோஷ பதுவையே” எனப்புகழ்பாடி 1646 - ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 16-ம் நாள் பாப்பிறை 12-ஆம் பத்திநாதர் “அந்தோணியார், திருச்சபையின் மாமேதை” என்ற பட்டத்தை அளித்தார். அதாவது பெரும் வேதபாரகர் என்பதாகும். இப்பட்டம் பெற்ற புனிதர்கள் ஒரு சிலரே.

**கடிதங்கள் அற்புதமாய்ச் செல்லுதல்**

அந்தோணியார் இறக்குமுன் ஒரு கடிதம் எழுதி தன் மேசைமேல் வைத்தார். அது சபை மேலாளருக்கு கொண்டு செல்லப்படவேண்டியது. எடுத்துச் சென்றிட எவரும் இல்லை. மேசை மீது வைத்து விட்டு வெளியே வந்தார். கடிதத்தைக் காணவில்லை. தேவதூதர்கள் அதனை எடுத்துச் சென்றனர். பதிலும் கிட்டியது.

ஸ்பெயின் நாட்டு டான்றி வணிகன் தென் அமெரிக்கா சென்றான். அவனது மனையாள் கடிதம் எழுதினாள். பலநாட்கள் கடந்தும் பதிலில்லை . கடிதம் ஒன்று எழுதி மடத்திலுள்ள அந்தோணியார் சொரூபத்தின் கரத்தில் வைத்துவிட்டு வீடு சென்றாள். அடுத்த நாள் சொரூபத்தின் கையில் பதில் கடிதம் இருந்தது. கோவில் ஊழியன் அதை எடுத்து விட முயன்றும் இயலவில்லை . அப்பெண் வந்து கடிதத்தை எடுத்தாள். பிரான்சிஸ் சபைத்துறவி ஒருவர் அதனைத் தம்மிடம் தந்தார் என எழுதப்பட்டிருந்தது. அதனுள் 300 தங்கக்காசுகளும் இருந்தன. தன்மீது இரங்கி ஏழை பங்காளன் அந்தோணியார் தாமே அஞ்சலை எடுத்துச் சென்றார். என அறிந்து நன்றி நவின்றாள்.

**இறந்த சிறுவனை உயிருடன் கொணர்தல்**

அந்தோணியார் பெற்றோரின் மூத்த மகன் என வரலாறு கூறுகிறது. . அவருடன் பிறந்தோர் எத்தனை பேர் என அறிய இயலவில்லை. ஆயினும் அந்தோணியாரின் சகோதரி டோனா அம்மையார் என ஒருவர் இருந்தார் என்று ஒரு புதுமை வழி அறியலாகின்றது.

டோனா அம்மையாரும் அவரது கணவரும், பிள்ளைகளும் படகில் பயணம் செய்யும்போது படகு மூழ்கியது. ஐந்து வயதுள்ள சிறுவனை மட்டும்

காணவில்லை . அவள் அழுது பிரலாபித்தாள். "என் அன்பு சகோதரனே , என்னை மறந்தீரோ? என்னை எவ்வளவாக நேசித்தீர்! நீர் யார்யாருக்கெல்லாமோ உதவி செய்து புதுமை வள்ளல் என்று பெயர் பெற்றீரே! புனிதர் பட்டமும் பெற்றீரே! என் குழந்தையைக் காப்பாற்றி உம் சொந்தத் தங்கைக்கு உதவலாகாதா?" என உரிமையுடன் தன் அண்ணனை நோக்கி மன்றாடினாள்.

**புதுமையாக பையன் மீண்டும் கிடைத்தான்.**

தன் தமையனுக்குச் செய்த வாக்குறுதிப்படி சிறுவனை பிரான்சிஸாரின் குருமடத்திற்கு அனுப்பினாள். சிறந்த துறவியாக வாழ்ந்தான்.

**இறந்த மூவருக்கு உயிர் தருதல்**

பதுவை நகருக்கருகில் உள்ள ஒரு சிறு கிராமத்தில் யூரோலியா என்ற சிறுமி குளத்தில் வீழ்ந்து இறந்தாள். சிறுமியின் தாய் அந்தோனியாரை வேண்ட, மாண்ட பெண் உயிர் பெற்றாள். தாயும் சேயும் புனிதரின் கல்லறைக்குத் திருயாத்திரை சென்றனர்.

டிரவிஸோ என்ற ஊரிலுள்ள விறகு வெட்டியின் ஒரே மகன் இறந்தான். தந்தை அந்தோணியாரின் பக்தன். தமக்கு ஞான வள்ளல் உதவி செய்வார் என முழுமனதுடன் நம்பி சடலத்தை சவப்பெட்டியில் வைத்திட அவன் மறுத்தான். மூன்றாம் நாள் புதல்வன் உயிருடன் எழுந்தான்.

1775ல் அந்தோணியார் பிறந்த பட்டணமான லிஸ்பனில் பெரும் நிலநடுக்கத்தால், பலத்த சேதம் ஏற்பட்டது. அந்தோணியார் பீடத்திற்கு எந்த அழிவும் ஏற்படவில்லை . இந்த ஆபத்து வேளையில் ஆலயத்தினுள் ஒரு சிறுவன் சிக்கினான். அவன் மூன்று நாள் வரை அற்புதமாய் ஆகாரம் அளிக்கப்பெற்று உயிருடன் மீண்டான்.

பதுவை நகரிலுள்ள அந்தோணியார் ஆலயத்திற்கு அருகிலுள்ள ஒரு சிறு குளத்தில் ஒன்றரை வயதுள்ள குழந்தை ஒன்று இறந்து கிடந்தது. அந்தோனியாரை உறுதியுடன் வேண்ட அக்குழந்தை உயிர் பெற்றது. மகிழ்ந்த தாய் நன்றியறிதலாக சிறுவனின் நிறைக்கேற்ப தானியம் அன்பளிப்புச் செய்தாள்.

**மனந்திரும்பிய அராபியர்**

தமாஸ்கு பட்டணத்தில் அராபியத் தளபதி ஒருவர் வாழ்ந்தார். இரண்டாவது உலகப்போரின் போது அவர் மனைவியையும், சிறுமிகளையும்

பாதுகாப்பிற்கென பிரான்ஸ் மாநகரில் விட்டு வந்தார். அவர் திரும்பியதும் துக்க செய்தி அவருக்காகக் காத்திருந்தது. ஹிட்லர் பிரான்ஸைப் பிடித்து விட்டார் என்பதே அச்செய்தி. தன் மனைவி, மகள் கதி என்ன ஆனதோ? என நினைத்து மனம் உடைந்தார். பிரான்ஸ் சென்ற அவருக்கு ஒரு புலனும் கிடைக்கவில்லை . இவர் நண்பர் ஒருவர், வத்திக்கானுடன் தொடர்பு கொண்டால் அவர்கள் இதனைக் கண்டுபிடித்து உதவுவர் என்றார். பாப்பானவரால் இத்தகைய பணிக்கென்று உண்டாக்கப்பட்ட அலுவலகத்துடன் தொடர்பு கொண்டனர். அவர்களும் உதவி செய்ய முன்வந்தனர். புனித அந்தோனியாரை மன்றாட தம் நண்பரை ஊக்குவித்தார். இவர் நண்பர் வெள்ளப்பெருக்கில் திக்குமுக்காடும் தனக்குக் கிடைத்த மிதப்புக்கட்டை என, அவரும் தூயவரிடம் நம்பிக்கை வைத்தார்.

ஜெர்மெனிக்குச் செல்லும் வழியில் அவன் மனைவி இறந்தாள் என்றும், மில்லா என்ற சீமான், மகளை அமெரிக்காவிற்கு எடுத்துச் சென்றார் என்றும் வத்திக்கான் அறிவித்தது. அங்கு சென்று, தேடி அலைந்தார்.

ஒரு நாள் அந்தோணியார் ஆலயம் சென்று செபித்துக் கொண்டிருக்கும் போது 12 வயது சிறுமியொருத்தியும் செபித்த வண்ணமிருந்தாள். அவளை யாரோ ஒருவர் “மிர்ஸர்“ என அழைத்தார். அவள் என் பெயர் மேரி என்றாள். அவளே தன் மகள் எனக் கண்டு கொண்ட அராபியத் தளபதி மிர்ஸ்சருடன் இல்லஞ் சென்றார். சம்பாசணையின் போது இவர் தந்தையென அவர்கள் அறிந்ததும் மகிழ்ச்சி அடைந்தனர். அராபியரும் கத்தோலிக்கரானர்.

# அர்ச்சியசிட அந்தோணியாரின் காலச்சக்கரம்

1195 பிறப்பு ஆகஸ்டு 15- லிஸ்பனில் ஞானஸ்தானம்

1210 துறவு பூணுதல் - அகஸ்தீனார்மடம் சேருதல் - பின் கோயிம்பிரா செல்லுதல்

1219 குரு பட்டம் (வயது 24) - ஆப்பிரிக்காவின் வேத சாட்சிகளை சந்தித்தல்.

1220 பிரான்சிஸ்கன் சபையில் சேருதல் - பெர்தினாந்து அந்தோணியாராதல் - ரிமினி ஆயரின் படுகொலை - மொராக்கோ (ஆப்பிரிக்கா) புறப்பாடு

1221 போர்சியுங்குலா மாநாடு - அந்தோணியாரின் முதல் மறைஉரை - போர்லி

1222 பிரான்ஸ் நாடு செல்லுதல்

1222-26 பிரான்ஸ் நாட்டில் போதனை செய்தல்

1225 அசிசியார் மரணம், அந்தோணியார் இத்தாலி வருதல் - அவரிடம் தேவபாலன் தவழ்தல்

1227 பிரான்சிஸ்கன் சபைப் பொது மேலாளர்

1228 பிளாரன்ஸ் நகரில் சேவை - முதல் முறையாக பதுவைப்பதி வருதல் - உரோம் பயணம் பாப்பிறை முன் அந்தோணியார்

1230 சபைப் பொது மேலாளர், பதவியை விட்டு விலகல் 2ம் முறை உரோமாபுரி பயணம் - சபையின் சிதைவுகளுக்கு முடிவு காணுதல்.

1231 கடன் நிவாரணச் சட்டம் - ஜூன் 13 காலமாதல், அடக்கம் ஜூன் 17,

1263 அழியா நாவினை எடுத்தல் - பதுவை ஆலய வேலை முடிவுறல்.

1310 இரண்டாம் முறை நல்லடக்கம்

1946 ஜனவரி 16 வேதபாரகர் பட்டம் அளிக்கப்படுதல்,